KALKI 27.3.94 ரூ. 3.00

# கல்கி

ஸ்ரீரங்கம் - திருவாணைக்கோவில் - சமயபுரம் சிறப்பிதழ்

## அரங்கனுக்குச் சவால்விடும் அடுக்கு மாடிகள்!



# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

Nestlé
NESTUM
Baby Cereal
Weaning Food
Rice
mix with milk
Refill Pack

லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

**இலவசம்**
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25.
புதுதில்லி-110016

NESTLÉ

# நெஸ்டம்

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதிலிருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்

TS McCann/NESTUM/1492 TM



# கொட்டாரத்துல உலக்கை பிடிக்கப் போறேன்..!

- ஸ்ரீரங்கநாதர் ஆலயத்தில் வாகனங்களுக்கும் நிவேதனம் செய்யப்படுகிறது. ஸ்ரீரங்கநாதர் பள்ளி கொண்டிருக்கும் ஐந்துதலை நாகத்திற்கு 'அரவணை' என்ற, பாலிலேயே செய்யப்பட்ட சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்யப்படுகிறது.

- நமக்கு குடும்ப மருத்துவர் (Family Doctor) இருப்பது போல் ஸ்ரீரங்கநாதருக்கு ஒரு குடும்ப மருத்துவர் இருக்கிறார். அவருக்கு தன்வந்திரி என்று பெயர்! அன்றாடம் காலையில் தன்வந்திரியிடமிருந்து சுக்கு,வெல்லம் கலந்து மருந்து பெருமாளுக்கு வைத்தியம் செய்யப்படுகிறது. தன்வந்திரிக்கென்று தனி சந்நிதி, தாயார் சந்நிதிக்குச் செல்லும் வழியில் உள்ளது.

- சிவாஜி கணேசன், திருவானைக்காவல் கோவிலுக்கு- யானை ஒன்றை அன்பளித்திருக்கிறார். அதன் பராமரிப்புச் செலவையும் ஏற்றுக் கொண்டுள்ளார்.

- ஸ்ரீரங்கத்தில் இருந்தபோது எழுத்தாளர் சுஜாதாவும், பாடலாசிரியர் வாலியும் இணைந்து 'நேதாஜி' என்ற கையெழுத்துப் பத்திரிகையை நடத்தியிருக்கின்றனர். அப்போது வாலி கவிஞரல்ல. ஓவியர்; பிறகுதான் கவிதைக்குத் தாவினார்.

- சமயபுரம், சனிக்கிழமை ஆட்டுச் சந்தை திருச்சி மாவட்டத்தில் புகழ் கொண்டது. அன்றைய தினம் மட்டும் அங்கே லட்ச ரூபாய் அளவுக்குப் பணப் புழக்கமிருக்கும்.

- திருச்சி மாவட்டத்திலேயே, ஸ்ரீரங்கத்தில்தான் அதிக திருமண மண்டபங்கள் உள்ளன. கிட்டத்தட்ட முப்பது திருமண மண்டபங்களை திருமண சீஸன் இல்லாத காலங்களில் சுற்றுலாப் பயணிகளுக்காக வாடகைக்கு விட்டுவிடுவார்கள்.

- பழைய காலத்தில் ஸ்ரீரங்கம் கோவிலைச் சுற்றி உள்ள கொட்டாரத்தில், கோவிலுக்குத் தேவையான அவல், மாவு எல்லாவற்றையும் பெண்களை வைத்து கூலிக்கு இடித்து வாங்குவது வழக்கம். சூடான புழுக்கிய நெல்லை அவலுக்கு இடிக்கும்போது, நடுவில் நிறுத்த முடியாது. இதனால் இந்தப் பெண்கள், கோவிலுக்கு வரும் பெண் யாராவது அந்தப் பக்கம் வந்தால், ஒரு நிமிடம் இந்த உலக்கையைப் பிடித்து இடித்துக் கொண்டிரு. என் குழந்தையைப் பார்த்துவிட்டு நொடியில் வருகிறேன்'' என்பார். ஏமாந்த பெண், தான் முழுவதும் இடித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்! கிடைத்த சான்ஸை விடாமல் கொட்டாரத்துப் பெண், தன் வேலை முழுவதும் முடித்துக் கொண்டு கூலி வாங்கும் சமயத்தில் தான் வருவாள்! இதனால், கடுமையான வேலையைத் தலையில் கட்டினால் ''ஏதேது, ஸ்ரீரங்கம் கொட்டாரத்தில் உலக்கைப் பிடிப்பது போலிருக்கிறதே!'' என்று சொல்வது வழக்கமாகிவிட்டது.

துணுக்ஸ் by தாயு. செந்தில்குமார், லால்குடி ராஜேந்திரன், எம்.கதீஜா ஹனீஃபா, கிருஷ்ணவேணி ரங்கநாதன்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் : எஸ்.நடரா


✱ கஜானா காலி!


✱ வெற்றி பெறுவாரா?


✱ அமைச்சராவாரா?


✱ ஆட்சி பிடிப்பாரா?


✱ தெரியாத விஷயம்!


✱ வெற்றி இவரா?

● என். நடேசன், திருச்சி-1.

*? 'தொடர்ந்து குரைப்பேன், பயனில்லை என்றால் கடைசியில் கடிப்பேன்' என்று சேஷன் கூறியிருப்பது பற்றி...?*

! அவர்தான் 'நான் ஒரு அல்சேஷன்' என்று முன்னமேயே சொல்லி விட்டாரே!

● எஸ்.நடராஜ், சீர்காழி. ❑

*? மாவட்டத்துக்கு மாவட்டம் பலகோடி ரூபாய்களுக்கு முதல்வர் திட்டங்களை ஆரம்பித்து வைக்கிறாரே, நிறைவேறுவது சாத்தியம் தானா?*

! நிறைவேறுகிறதோ இல்லையோ, ஆரம்பித்து வைப்பதில் அரசியல் லாபம் தானே! அதிலும் ஒரு வேளை டிஸ்மிஸ் ஆகலாமோ என்ற அச்சம் எட்டிப் பார்க்கும்போது!

● இரா. சிவக்குமார், சென்னை-78.

*? மனைவியின் இரத்தத்தை எடுத்து பிராந்தியில் கலந்து குடித்த காட்டுமிராண்டி பற்றி...?*

! அது பற்றி விரிவாக எழுதி, படம் போடுவதும் ஒருவகை காட்டுமிராண்டித்தனம்தான்.

● தேனம்மாள் ராமசாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

*? சர்வதேசப் பெண்கள் விழா பற்றி...?*

! "Women must come up by choice and not by mere chance" என்று முதல்வர் பேசியிருக்கிறார். நல்ல சிந்தனை. ஆனால் அந்த choice க்கும்

# சசிகலாவை முதல்வர் ஏன் இன்னும் அமைச்சராக்கவில்லை?

ஒரு சான்ஸ் அடிக்க வேண்டும் என்பதற்கு அவர் வாழ்க்கையே உதாரணம் என்பது மற்றொரு சிந்தனை!

● தி. அறிவரசு, திருச்சி.

*? தஞ்சை பல்கலைக் கழக கஜானா காலியானதற்குக் காரணம் அவ்வையா? அரசா?*

! உலகத் தமிழ் மகாநாட்டில் பட்டிமன்றம் வைத்துத் தெரிந்துகலாம்.

● க. முருகேசன், அந்தமான்.

*? ஸ்டார் டீவியினால் இந்தியாவின் பண்பாடு பாதிக்கப்படுமா?*

! தூர்தர்ஷன் வழங்கும் 'சூப்பர் ஹிட் முகாபலா' வினால் பாதிக்கப்படாத பண்பாடு பாக்கியிருக்கா என்ன!

● கே.மதுரகீதா, கும்பகோணம்.

*? வீரப்பன் வேட்டையில் ஸ்ரீபாலாவது வெற்றி பெறுவாரா?*

! எங்கே? அதான், 'விரைவில் வேலைக்குத் திரும்பி வீரப்பனைப் பிடிப்பேன்'னு தேவாரம் சபத அறிக்கை வெளியிட்டு விட்டாரே!

நீங்கள் கேட்டவை: தராசு

அப்புறம் ஸ்ரீபாலுக்கு ஏது சான்ஸ்?

● வைத்தியா, திருவெண்ணெய் நல்லூர்.

**? சசிகலாவை அமைச்சராக்கும் எண்ணம் ஜெயலலிதாவுக்கு ஏன் இன்னும் வரவில்லை?**

! சசிகலா இன்று சூப்பர் முதலமைச்சராக இருப்பதாகப் பலரும் நம்பும் போது எதற்கு அவர் நிலையைக் குறைக்க வேண்டும் என்று முதல்வர் எண்ணியிருக்கலாம். பலரும் இன்று ரொம்பக் கவலைப்படுவது, ''சசிகலாதான் என் அரசியல் வாரிசு'' என்று 'திடுக்' என்று அறிவித்துவிடுவாரோ என்றுதான்!

● ஆர். கர்ணன். பெத்த ரெங்கபுரம்.

**? என்.டி.ஆர்.மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றுவாரா?**

! அவருக்காக இல்லாவிட்டாலும் புது மனைவிக்காகவாவது கைப்பற்றியாக வேண்டும்! இப்போது போலவே காங்கிரஸ் தொடர்ந்து இன்னும் கொஞ்ச நாளைக்கு ''ஒத்துழைப்பு'' தந்தால் நிச்சயம் வெற்றி பெற்று விடுவார்!

● எஸ்.என்.ராகவன், பெல்லாரி.

**? முன்னாள் நடிகை தேவிகாராணி?**

! ரோரிச்சின் மனைவி; ஏராள சொத்து; பிரமாதமாக ஆங்கிலம் பேசுவார்; உலகின் மிக அழகிய பெண்களுள் ஒருத்தி என்று பெயரெடுத்தவர் போன்ற பல விஷயங்கள் எல்லோருக்கும் தெரியும். ஆனால் அந்த ஆரம்பக் காலத்திலேயே பிரபாத் ஸ்டுடியோவில் டைரக்டர் முதல் லைட்பாய் வரை எல்லோரும் மூக்குப் பிடிக்கச் சாப்பிட கான்டீன் நடத்தியவர் என்பது பலருக்கும் தெரியாது.

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

**? முதல்வரின் பிறந்த நாளுக்காக அமைச்சர்கள் தினசரிகளில் செய்த விளம்பரங்களுக்கு 77 லட்சத்து 66 ஆயிரத்து 720 ரூபாய் ஆச்சாமே?**

! இது என்ன கஞ்சத்தனம்? ஒரு கோடி ரூபாய் கூட செலவு செய்ய அவர்களுக்கு வக்கில்லாமல் போய்விட்டதா! அல்லது மனமில்லையா?

● சி.சரவணன், திருத்துறைப்பூண்டி.

**? காவிரி பிரச்னையில் பின் வாங்க மாட்டேன் என்று தஞ்சை விழாவில் 'ஜெ' சபதம் பற்றி...**

! ஐயய்யோ! இன்னொரு உண்ணாவிரதமா?

● எஸ்.ஜெகஜோதி, சேதுநாராயணபுரம்.

**? ஜெனீவா மனித உரிமைக் கமிஷனில் இந்தியா பெற்ற வெற்றி குறித்து...?**

! வாஜ்பாயியின் தலைமையினாலா, சால்மன் குர்ஷீத்தின் சாமர்த்தியத்தினாலா, கே. ஸ்ரீனிவாசனின் சாதுர்யத்தினாலா என்று போட்டி போட்டுக் கொண்டு அலசல் நடப்பது ஒரு புறம் இருக்க, முக்கிய காரணம், சீனாவும், ஈரானும் தக்க சமயத்தில் பாகிஸ்தானுக்கு அறிவுரை வழங்கியதுதான்.

● தெ.க.திலீபன், வத்திராயிருப்பு.

**? இந்தியா-பாக் போர் ஏற்பட வாய்ப்புள்ளதா?**

! ஜெனிவாவில் ஏற்பட்ட தோல்வி-தலைகுனிவு காரணமாக, உள்நாட்டு எதிர்ப்புச் சக்திகளைச் சமாளிக்கவேனும் 'எல்லைப் புறத்தில் போர் மூளலாம்' என்று பூச்சாண்டி காட்ட வேண்டிய கட்டாயம் பேநசீருக்கு ஏற்பட்டுள்ளது. அதுதான் அங்கு அவ்வப்போது கேட்கிற துப்பாக்கிச் சத்தத்துக்குக் காரணம். ஆனால் பாகிஸ்தான் முழு முனைப்போடு ஈடுபடாது என்பதே ராணுவ வட்டாரங்களின் கணிப்பு.

● ராஜ்குமார், திருவில்லிபுத்தூர்.

**? இந்திரா காந்தியைக் கொலை செய்ய முயற்சி செய்ததாகக் கருணாநிதி, அன்பழகன், ஆசைத்தம்பி, வை.கோ. முதலியோர் மீது போடப்பட்ட வழக்கில் உயர்நீதி மன்றம் அனைவரையும் விடுதலை செய்து விட்டதே?**

! வழக்குப் போட்டது அரசியல் போக்கின் கட்டாயம்; வழக்கு தள்ளுபடியானது சட்டம்-நீதியின் நிலை நாட்டம்.

● ஜி.மாஜினி, சென்னை-52.

**? உண்மையில் உதயசூரியன் சின்னம் யாருக்கு சார் சொந்தம்?**

! தி.மு.க.வுக்கு!

● முகவை முத்துசாமி, நாரேந்தல்.

**? நிஜ அரசியல்வாதிகளை இனம் கண்டு கொள்வது எப்படி?**

! அரசியல்வாதி என்று சொல்லிவிட்ட பிறகு 'நிஜம்' எங்கே வந்தது?

● இரா.கல்யாணசுந்தரம், மதுரை.

**? அ.தி.மு.க.வை அனுசரித்துப் போகும் தினமலர் நிருபரை அ.தி.மு.க.வினரே கமுதியில் உதைத்தது குறித்து...?**

! 'என்றும் கை விரிக்கும் ஸ்ரீதேவிதான் இல்லேன்னு சொல்லிட்டா; தினம் கொடுக்கிற மூதேவி உனக்கென்னடி வந்தது' என்று திட்டியதாக வசனம் உண்டு.

● கணேஷ் ராகவன், சென்னை-19.

**? சாமியாரிடம் இரண்டு கோடி மோசடியாமே?- செய்தி பார்த்திரா?**

! பார்த்தேன்; பறிகொடுத்தவரின் அதிர்ச்சி பற்றியும் படித்தேன். நோட்டுக்களாக வைத்திருந்ததும், ஆராயாமல் தந்ததும், அடைந்த அதிர்ச்சியும்- எதுவுமே காவித் துறவிக்கு உகந்ததல்ல.

● ஏ.சுகுமார், காட்டுக்கானூர்.

**? 'புரட்சித் தலைவி கடவுளையே பெற்றெடுக்கக் கூடிய தாய்' என்று இந்திரகுமாரி புகழ்கிறாரே?**

! ஓ! அதான் அவரைப் பராசக்தியாகப் படம் எழுதி பானர் வைக்கிறார்களா! புரிகிறது, புரிகிறது!

# அரங்கனுக்கும் சவால்விடும் அடுக்கு



● திருவானைக்காவல் ஃப்ளாட்கள்...

அலைபுரளும் காவிரி, அணிசேர் மாடங்கள், ஆரணங்கினர் கீதங்கள், நாற்புறமும் வேத கோஷம் அரங்கன் ஆட்சி, ஆழ்வார் பாசுரங்கள் என்றெல்லாம் சரித்திரம் காட்டும் ப்ளூ ப்ரிண்ட் போல் இன்று ஸ்ரீரங்கம் இல்லை... கல் மண்டபங்கள் ஹோட்டல்களாகி விட்டன; ராஜகோபுரத் தருகே ஒயின் ஷாப்; 'ஏ' போட்ட மலையாள சினிமா போஸ்டர், பம்பர் குலுக்கல் அறிவிப்புகள், 'கோயிலுக்குள் லுங்கி தானேய்யா கட்டிக் கொண்டு போகக் கூடாது....' என்று அண்டர் வேருடன் அரங்கன் தரிசனத்துக்கு வரும் 'பக்தர்கள்'....

திருவானைக்கோயிலிலும் கோபுரத் தோற்றத்தைக் கெடுக்கவென்றே துருத்திக் கொண்டு நிற்கும் பலமாடி லாட்ஜ், கட்சிக் கொடி தோரணங்கள், வசவு வாசகங்களுடன் பானர்கள்.....

சரித்திரச் சிறப்பு வாய்ந்த இடங்களைப் போற்றிப் பாதுகாப்பதற்கு பிரிட்டிஷ்காரர்களிடம் கற்றுக்கொள்ள வேண்டும். ஷேக்ஸ்பியர் வாழ்ந்த வீட்டின் கூற்றுக் கூரைக்கு அவர் காலத்தில் வேய்ந்த 'கோரையை' இன்று ஸ்பெஷலாகப் பயிரிட்டு உபயோகிக்கிறார்கள்....

அத்தகைய சிரத்தை நம்மிடம் இல்லாதது வருத்தம் என்றால், ஒரு பாரம்பரிய மிக்க இடத்தை நமது சுயநலத்துக்காகக் குட்டிச் சுவர் ஆக்குவது பற்றி நமக்குத் துளியும் சிந்தனை இல்லாதிருப்பது இன்னும் பெரிய சோகம்!

ஸ்ரீரங்கத்தின் புனிதத் தன்மையே அதற்குப் பெரிய அச்சுறுத்தல் என்றால் வியப்பாயில்லை? ஆமாம், இந்தியாவின் பல பகுதிகளிலும் பணியிலிருந்துவிட்டு, ஓய்வுக் காலத்தை அரங்கன் அடி நிழலில் கழிக்க வேண்டும் என்று பல நூறு பேர் இவ்விடம் வந்திருப்பதாகக் கூறுகிறார் எம்.வி. மருதாசலம். இவர்களுக்காக ஸ்ரீரங்கத்தில் மருதாசலத்தின் ரோஹிணி க்ரூப் அழகழகான ஃப்ளாட்களைக் கட்டி விற்று வருகிறது. வெங்கட்ரமணி, எஸ்.கே. வாசுதேவன் போன்ற அதிபர்களும் சென்னையில் பிரபலமான பார்ஸன் நிறுவனமும் கூட ஸ்ரீரங்கத்து ஃப்ளாட்கள் சந்தையில் இறங்கியிருக்கிறார்கள். 'இவ்விடம் ரேஷனில் கிடைக்கும் பாமாயில், மண்ணெண்ணெய் போல்' ஃப்ளாட்களுக்கு கிராக்கி' என்று எழுதியிருக்கிறார் ஒரு ஸ்ரீரங்கம் வாசகர்.

# மாடிகள்!

இதில் என்ன அச்சுறுத்தல் இருக்க முடியும் என்கிறீர்களா....?

ஸ்ரீரங்கம் நகரம் காவிரி, கொள்ளிட நதிகளுக்கிடையே அமைந்த குறுகலான மணல் திட்டு. இதன் நிலப்பரப்பின் அகலமான பகுதியே சுமார் ஒரு கிலோமீட்டர்தான். மிக நீளமான பகுதி அதனினும் சற்றுக் கூடுதலாய் இருக்கும்; அவ்வளவே.

இந்தப் பகுதிக்குள் கடந்த ஐந்தாறு ஆண்டுகளில் சுமார் அறுநூறு அபார்ட்மென்ட்கள் கட்டப்பட்டுள்ளன. இப்போதும் கட்டப்பட்டு வருகின்றன!

ஒரு குறுகலான நிலப்பரப்பில் இப்படி ஜனத்தொகை பெருக வழி செய்யும் போது அடிப்படை வசதிகள் இருக்கவேண்டாமா....?

''குடி நீரைப் பொறுத்தவரை பிரச்னை இல்லை'' என்கிறார் மருதாசலம். ''எல்லா அபார்ட்மென்ட்களிலும் போர்வெல் போட்டுத் தண்ணீர் எடுத்துக் கொள்கிறார்கள். ஸ்ரீரங்கத்தில் தண்ணீர் பிரச்னையே வராது'' என்கிறார். (இதற்காகவே பல திருச்சிகாரர்கள் ஸ்ரீரங்கத்தில் ஃப்ளாட் வாங்கிக் கொண்டு குடியேறியிருக்கிறார்கள்!)

அடுத்ததாக டிரெய்னேஜ் - ஸ்ரீரங்கம் டவுனுக்கு முழுமையாகப் பாதாளச் சாக்கடை வசதி வந்தபாடில்லை. இந்த நிலையில் அபார்ட்மென்ட்களின் கழிவு நீர் எப்படி அப்புறப்படுத்தப்படுகிறது?

''குளியலறைத் தண்ணீர் தனியே பிரிக்கப்பட்டு திறந்தவெளிச் சாக்கடைக்குச் செல்கிறது. கழிப்பறை நீர் செப்டிக் டாங்குகளில் நிரப்பப்படுகிறது. செப்டிக் டாங்குகளில் விழும் நீர், பூமியில் உறிஞ்சப்படும். திடக் கழிவுகள் மட்டும் அதன் அடியில் தங்கிவிடும். அதனைச் சில வருடங்களுக்கொரு முறை அப்புறப்படுத்த வேண்டும்....''

- இப்படிச் சொல்லும் மருதாசலத்திடம் கேட்கிறோம் - ''பூமியில் உறிஞ்சப்படும் செப்டிக் டாங்க் தண்ணீர் அதிகமாக ஆக, ஸ்ரீரங்கத்தை அணைத்துக் கொண்டு ஓடும் ஆறுகளின் தூய்மை கெட்டுப் போகாதா....?''



● சத்யமூர்த்தி

''நாளாவட்டத்தில் அப்படி ஆவதற்கான வாய்ப்புகள் உண்டு!'' என்று மருதாசலமே ஒப்புக் கொள்கிறார்.

''அப்படியெனில் உடனடி நடவடிக்கையாக நீங்களும் உங்களைப் போன்ற பிற ஃப்ளாட் பில்டர்களும் சேர்ந்து ஏதேனும் செய்ய வேண்டாமா?''

''நாங்கள் என்ன செய்வது? பாதாளச் சாக்கடைத் திட்டத்தை விரைவாகச் செயல்படுத்தும்படி வலியுறுத்துகிறோம் - இதை நீங்களும் எழுதுங்கள்...''

''அடிப்படை வசதிகளைச் செய்து கொள்ளாமல் அபார்ட்மென்ட்கள் கட்டுவதில் ஏன் இறங்க வேண்டும்....?'' என்று கேட்டால் ''சென்னை, பழவந்தாங்கலில் கூட டிரெய்னேஜ் கிடையாது. ஆனால் ஃப்ளாட்கள் கட்டவில்லையா?'' என்று பதிலுக்குக் கேட்கிறார் மருதாசலம்.

அடிப்படை வசதிகள் பிரச்னை ஒருபுறமிருக்க, ஸ்ரீரங்கத்தின் பூமி வாகு, அடுக்குமாடிக் கட்டடங்கள் கட்டுவதற்கு ஏற்றதுதானா...? அப்படி கட்டிக் கொண்டே போனால் ஏற்கெனவே உள்ள கோயில் கோபுரம் போன்ற அமைப்புகள் பாதிக்கப்பட வாய்ப்பு இருக்கிறதா? என்று பலதரப்புகளில் விசாரித்தோம்.

திருச்சி நேஷனல் காலேஜின் ஜியாலஜி

பிரிவைச் சேர்ந்த சத்யமூர்த்தி, பி.டபிள்யூ.டி அளித்த சில புள்ளி விவரங்களின் அடிப் படையில் ஸ்ரீரங்கம் பூமி அமைப்பு குறித்து ஆய்வுகள் நடத்தியவர். கோயிலைச் சுற்றிய பகுதியில் இருபது மீட்டர் ஆழத்துக்கு மண லும் களிமண்ணும் கலந்த நில வாகு அமைந்திருப்பதாகவும் அதற்கும் கீழே பாறைகள் இருப்பதாகவும் இவரது ஆய்வு கள் வெளிப்படுத்தியுள்ளன.'' எனினும் இதன் அடிப்படையில் எந்தக் கட்டட நிறு வனமும் திட்டமிட்டுச் செயல்பட்டு விடக் கூடாது. அவர்களே ஆழ்துளைகள் தோண்டி மண் மாதிரிகளை ஆராய்ந்து பூமி கட்டு மானத்துக்கு ஏற்றதா எனத் தீர்மானம் செய்யணும்'' என்கிறார்.

''அப்படியொரு ஆய்வை, எங்கள் துறை மாணவர் ஒருவரை மேற்கொள்ளச் செய்யலாம்'' என்கிறார் இத்துறைப் பேரா சிரியர்.

''ஏழடி வரை அகழ்ந்து அஸ்திவாரம் போடுகிறோம். ஸ்ரீரங்கம் பூமிக்கு நல்ல வலு இருக்கிறது - ஒரு சதுர இஞ்ச் பரப்பில் இருபது டன் எடை வரை Safe Bear ing Capacity இருக்கிறது. Pile Foundation போட் டாலும் 'driver piles' போடும் அவசியம் இல்லை - அதனால் ஏற்கெனவே உள்ள கட்டமைப்புகளுக்கெல்லாம் பாதிப்பு வரும் வாய்ப்பே இல்லை...'' என்று மருதா சலம் உறுதி அளிக்கிறார்.

இந்தச் சூழ்நிலையில்தான் மாநில அரசிடமிருந்து அரசாங்க ஆணை ஒன்று வந்து சேர்ந்திருக்கிறது! பாரம்பரியப் பெருமை மிக்க ஊர்களில் அவ்வூர்களின் பராமரிப்புக்கும் மேம்பாட்டுக்கும் உதவும் வகையில் பன்னிரண்டு அம்சங்களை உள்ளடக்கியது இந்த ஜி.ஓ. ஜூலை 6, 1993 தேதியிட்ட இந்த ஜி.ஓ., வந்த பிறகு ஸ்ரீரங்கத்தில் ஒரு மாடிக்கும் அதிகமாக உள்ள கட்டடங்கள் கட்டுவதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது.

கமிஷனரிடம் ஃப்ளாட்கள் பிரச் னையை எழுப்பியபோது, திருச்சியிலிருக் கும் டவுன் பிளானிங் அமைப்பின் டெபுடி டைரக்டரிடம் பேசச் சொன்னார். அவரிடம் தொடர்பு கொள்ள, சென்னையிலுள்ள Town and Country Planning அமைப்பின் இயக்குனரைப் பாருங்கள் என்றார். மேற் சொன்ன ஜி.ஓ. வின் இறுதியிலும் இந்த இயக்குனரைத்தான் உடனடி நடவடிக்கை எடுக்கவும், அரசுக்கு அது சம்பந்தமாக அறிக்கை வழங்கவும் கோரியிருக்கிறது. எனவே Town and Country Planning அலு வலகத்துடன் தொடர்பு கொண்டோம். அவர்கள் இது விஷயமாகப் பேசுவதற் கில்லை என்று கூறிவிட்டார்கள். (அரசாங்க அனுமதி தேவையாம். மக்களுக்குத் தகவல்












# T.S.S. NIDHI LTD

ESTD 1973

**THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED**

Regd. Office : 230, R. K. Mutt Road, Mylapore, Madras - 600 004. Phone : 77503.

**BRANCHES :** THIRUVANMIYUR - 112, Thiruvalluvar Salai, Madras - 600041 Phone : 410058
TONDIARPET - 667, T. H. Road, Madras - 600 081
SAIDAPET - 11, Jones Road, Saidapet, Madras - 600 015

## FIXED DEPOSIT SCHEME

| PERIOD (months) | Rate of Interest P. A. |
|---|---|
| 12 | 17% |
| 24 | 18% |
| 36 | 19% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

*(Re-Investment Plan)*

Amount of Deposit Rs. 1000/-

| PERIOD (months) | MATURITY VALUE |
|---|---|
| 12 | 1180 |
| 24 | 1425 |
| 36 | 1760 |
| 45 | 2025 |

## HIGHLIGHTS :

- Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
- Company is in 21st year of Service.
- Transaction with members only. (Rupees Two only for Membership.)
- Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
- No tax deduction at source if the fixed deposit holders submit 15H in case, for any financial year interest exceeds Rs. 2500/-
- Loan facility upto 75% on Fixed Deposit and 85% on Recurring Deposit paid-up amount.
- Pre-mature repayment facility as per terms and conditions.
- Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.

## JEWEL LOAN :

- Jewel Loan granted on Gold Ornaments at Rs. 300/- per Gram i.e. Rs. 2400/- per Sovereign (8 Grams).
- No limits • No Interest Tax • Recurring Deposit not required.

# SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19% P.A.

**Minimum Deposit Rs. 10,000/-** **Period - 12 months**

**(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)**

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| PERIOD in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Weekly Days A.M. | Weekly Days P.M. | Sunday A.M. | Weekly Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

| P. S. SAMBASIVAM | G. KUMARAVELU | K. R. V. RAMANI |
|---|---|---|
| Secretary | Vice-President | President |

## அடுத்த நகரம் - திருவாரூர்!

**திருவாரூர் வாசகர்களே! 'கல்கி'யின் நகரச் சிறப்பிதழ் வரிசையில், அடுத்தது உங்கள் ஊர்தான். தயாரிக்கப் போவதும் நீங்கள்தான். உங்கள் ஊர்ச் சிறப்பிதழில் என்னென்ன இடம் பெற வேண்டும் என்று நினைக்கிறீர்களோ - எழுதி அனுப்புங்கள்! நீங்கள் தருகிற தகவல்களின் அடிப்படையில் எமது நிருபர்கள் வந்து, நேரில் பார்த்து, பின் உங்கள் படைப்புகள் அரங்கேறும். கதைகள், கட்டுரைகள், பேட்டிகள், துணுக்குகள், தகவல் செய்திகள், பிரமுகர்கள் பற்றிய குறிப்புகள் என்று ஏராளமாய் எழுதி ஜமாய்த்துவிடமாட்டீர்களா, என்ன? ஒரு விஷயம். 15.4.94 க்குள் அனுப்பி விடுங்கள்!**

**- ஆசிரியர்.**

அறியும் உரிமை நமது சுதந்திர பாரத தேசத்தில் இந்த அழகில் இருக்கிறது!) எனவே, மேற்படி ஜி.ஓ. வின் பேரில் எந்த அளவுக்கு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது என்பது தெரியவில்லை.

இதற்கிடையில், தமிழ் நாடு ஃப்ளாட் பிரமோடர்ஸ் அஸோஸியேஷன் அமைப்பின் திருச்சி கிளை இந்த ஜி.ஓ. வுக்கு எதிராக ஸ்டே வாங்கத் திட்டமிட்டிருப்பதாகத் தெரிகிறது. ''ஒரு மாடிக்கு மேல் கட்டக் கூடாது என்று சட்டம் கொண்டு வர வேண்டுமானால், தமிழ்நாடு முனிசிபாலிடி பில்டிங் ஆக்டைத் திருத்தியாக வேண்டும். ஒரு திடீர் ஜி.ஓ. மூலம் இப்படித் தடை விதிக்க முடியாது'' என்கிறார்கள் அவர்கள்.

ஏற்கெனவே கட்டப்பட்டுவிட்ட அடுக்குமாடிக் கட்டடங்கள் ஒரு புறம். இவ்விஷயம் வழக்காகி வருடக்கணக்கில் இழுத்தடித்து இம்சிக்கும் அபாயம் மறுபுறம். இந்தக் கிடுக்கிப்பிடியின் இடையில்தான் அரவணை துயில்கிறார் ரங்கநாதர்.

''எங்களைவிட, வந்து போகும் பக்தர்கள்தான் ஊரை நாசமாக்குகிறார்கள்'' என்று ஃப்ளாட் வாங்குவோர் சமாதானம் சொல்லலாம்; கோயிலைச் சுற்றிய வீதிகளிலெல்லாம் நாங்கள் கை வைக்கவில்லையே...'' என்று ஃப்ளாட் புரமோட்டர்கள் ஒதுங்கிக் கொள்ளலாம்....

ஆனால்..... ஒப்பு நோக்குகையில் அடிப்படை வசதிகளும் நிலப்பரப்பும் நிறையவே வாய்க்கப்பெற்ற சென்னை நகரமே அடுக்குமாடி கலாசாரப் பெருக்கத்தால் திணறிக் கொண்டிருக்கிறது என்னும் போது சின்னஞ்சிறு ஸ்ரீரங்கத்துக்கு என்ன கதி நேரும் என்று நினைக்கவே பயமாயிருக்கிறது!

பிரச்னைகளுக்கெல்லாம் தீர்வு, திருச்சியையொட்டி கூடுதல் ஜனத்தொகையை வாங்கிக் கொள்ளும் ஒரு சாட்டிலைட் டவுன் உருவாவதுதான். அதற்கான அடிப்படை வசதிகள் உடனே கவனிக்கப்பட வேண்டும்.

திருவரங்கம் தொகுதியைச் சேர்ந்த அமைச்சர் கு.ப. கிருஷ்ணன் மனம் வைத்தால் இதற்கான முயற்சிகளை மேற்கொள்ளலாம். காளான் வளர்ச்சியில் கவனம் செலுத்தும் விவசாய அமைச்சர், காளான்களாகப் பெருகும் ஃப்ளாட்டுகளை அனுமதித்து விட வேண்டாம்!

அதனினும் முக்கியம், 'I Care for Srirangam' என்ற மந்திரம் ஸ்ரீரங்கம் விரும்பிகள் மனத்தில் ஒலிக்க வேண்டும்.

இல்லாவிட்டால், ரங்கநாதர் பாம்புப் படுக்கையைச் சுருட்டிக் கொண்டு ஒரு நல்ல சாடிலைட் டவுனைத் தேடிப் போக வேண்டியதுதான்!

**- சீதா ரவி**

வாசகர் தகவல் : என். பாஸ்கர், ஜி. மாதவன், எம். கிருஷ்ணமூர்த்தி, எம். சிவகுமார், மைதிலி சேஷாத்ரி.

**''அப்பா வீட்டுலே இல்லை... அங்கிள்!''**

**''உங்க அப்பா யாருக்கு வேண்டும்... அவரு வழக்கமா ஒளிஞ்சுக்கிற இடத்தைக்காட்டு, போதும்! என்னை ஒரு கடன்காரன் துரத்திக்கிட்டு வரான்!''**

**- கே.வி.**



# Kalki Shopping Page

## நீங்கள் இல்லாமலா இந்தப் போட்டி ?

18 வாரங்களுக்கு.
(சென்னைவாசிகளுக்கு மட்டும்)

## ஒரு சவரன் தங்க நகை பரிசு

**2** பெண்ணுக்குத் தேவை
புன்னகை / பொன்னகை

இதுவா ? அதுவா ? எழுதுங்கள்

மேலும் விபரங்களுக்கு தி.நகர் பனகல் பார்க்கில் (நல்லி) பஸ் ஸ்டாப் எதிரே உள்ள ஃபாஹிமாஸ் விளம்பரப்பலகையை பாருங்கள்.

**ஃபாஹிமாஸ்**
ஜுவல் ஹவுஸ்
78, உஸ்மான் ரோடு,
(ரங்கநாதன் தெரு எதிரில்)
திநகர், சென்னை 600 017.
போன் : 445744, 446073



சென்னை உஸ்மான் சாலையில் மட்டும்

SIBI ADS



**URVASHI**

85, Mowbrays Road, Madras - 600 018.

When everything else
is skyrocketing,
We have something
that dips down –
the sari prices!

Fabulous discount of
20% and more!

The clearance sale
is on, from Friday
March 25th , till
March 31st '94.

## சூர்யா விஷன் & PHILIPS




பிலிப்ஸ்
இணைந்து வழங்கும்







கலர் டி.வி. &
ஸ்டீரியோ கேஸட் ரெக்கார்டர்
ஸ்டீரியோ சவுண்ட் மெஷின்
ஸ்டீரியோ பவர் ஹவுஸ் &
பிலிப்ஸின் அனைத்து
பொருட்களுக்கும்

1. ரொக்கத்தில் வாங்குபவர்களுக்கு அதிக தள்ளுபடி
2. உங்களின் பழைய கருப்பு வெள்ளை / கலர் டி.வி.களை கொடுத்துவிட்டு புதியதை மாற்றிக் கொள்ளுங்கள்.
3. சுலபத் தவணைகள்
4. எல்லாவித கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக்கொள்ளப்படும் (Major)

மற்றும் எங்கள் மாத சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

**சூர்யா விஷன்**
147, வடக்கு உஸ்மான் ரோடு
சென்னை-600017 போன் : 8281452

# Kalki Shopping Page

FABRIC SENSE
AND
FASHION ESSENCE
OF
TRUE SUNGUTI

## RANGACHARI CLOTH STORE



**RCS**

55, Luz Church Road,
Mylapore, Madras - 4.
Phone : 4994545/4994343

## B. M. SILK SAREES

B. M. சில்க் சாரீஸ்
காஞ்சிபுரம்
பட்டுசேலை
தயாரிப்பாளர் :

5, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.

Avail Fabulous Discount on
Cotton Sarees
From 1.4.94 to 10.4.94

குறிப்பு : அனைத்து
பட்டு சேலைகளும்
தறி விலைக்கே கிடைக்கும்.



படித்து
விட்டீர்களா?
ஆன்மிக
மாத இதழ்
விலை ரூ. 6.00

## கோபுர தரிசனம்

மார்ச் '94 இதழில்...
பகவான் பாபா, சௌந்தர்யலஹரி,
அமிர்தம் வழங்கிய அடியவர்கள்,
ஸ்ரீராமபக்த ஹனுமான், ராசிபலன்,
பரந்தாமன் பதில்கள் இன்னும் பல அரிய பகுதிகள்

மார்ச் 94 இதழுடன்
யோகஸ்ரீரோன்மணி பாலச்சந்தர் வழங்கும்
**சூரிய நமஸ்காரம்**
**செய்வது எப்படி?**
விளக்கப்படங்களுடன் புத்தகம் இலவசம்
ஆண்டுச் சந்தா ரூ. 72/-
ஆயுள் சந்தா ரூ. 500/-
வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா ரூ. 500/-

## கோபுர தரிசனம்

மாத இதழ்.
திருவான்மியூர், சென்னை - 41.
போன் : 419053

உங்களது பொன்னான
கண்களை பாதுக்காப்பதே
அக்ஷி விஷன் கேர்



## AKSHI VISION CARE

EYE & CONTACT LENS
CLINIC
*OPTICALS attached*

144-S, Royapettah High Road,
Luz Corner, Mylapore,
Madras - 600 004.
(Opp. to VIVEK & CO.)
Phone : 4992576

# Kalki Shopping Page

கிளின்டன்

ராணியம்மா! ஜி.இ.ஸி, ரோல்ஸ்ராய்ஸ் இன்னும் பெரிய பெரிய கம்பெனிங்களெல்லாம் அனுப்பி வையுங்க... நாங்க ஒண்ணும் முழுங்கிட மாட்டோம், மூட்டை மூட்டையா 'ஸ்டர்லிங்' கரன்ஸி கொண்டு வரச் சொல்லுங்க. அப்படியே, நீங்களும் வேணும்னா ஒரு நடை வந்துட்டுப் போங்க. ஆட்சேபணை இல்லே... வா, வா...

எலிஸபெத் அரசி

அ.தி.மு.க. அணி

தி.மு.க. அணி

உனக்கு வெயிட்டு பத்தாதுப்பா! பாரு, மூணாவது அணி ரெடியாகுது... உட்கார்ந்து ஒரு அமுக்கு அமுக்கினேன்னா, அம்மாவை ஒரேயடியா தூக்கிடுவேன்!



# கல்கி




1994
மார்ச் 27
மலர் : 52
இதழ் : 35
ஸ்ரீமுக
பங்குனி 14


தமிழ்த்திரு நாடு
தன்னைப்பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்

## ஆளுனர் உரை: முதல்வருக்குத் தோல்வி!

பட்ஜெட் தொடரை ஆரம்பித்து வைத்துப் பேசிய ஆளுனர், ''புரட்சித் தலைவி'' என்ற சொல்லைப் பயன்படுத்த மாட்டேன் என்று கூறி விட்டதற்காக நமது பாராட்டுதலைப் பெறுகிறார். கட்சிப் பேச்சாளர் போல் ஆளுனர் நடந்து கொள்ள முடியாது. பதவியின் கண்ணியத்தையும் தமது கௌரவத்தையும் அவர் காப்பாற்றியாக வேண்டும். இரண்டாவதாக, ''எனது அரசு'' என்ற சொல்லைப் பயன்படுத்த விருப்பமின்றி ''இந்த அரசு'' என்றே குறிப்பிட்டிருக்கிறார். இதிலிருந்து இந்த அரசின் செயல்பாடுகள் பல தமக்கு ஏற்புடையதாக இல்லை என்பதைச் சொல்லாமல் சொல்லியுள்ளார்.

சட்டசபையின் ஆரம்ப தின நடவடிக்கைகளை விட, அன்று மாலையே இ.காங்கிரஸ் தனது தோழமைக் கட்சிகளுடன் சேர்ந்து ஆளுனரிடம் சமர்ப்பித்த அறிக்கை பரபரப்பு மட்டுமின்றி, முக்கியத்துவமும் பெறுகிறது. இந்த அரசின் குறைகளையும் குற்றங்களையும் விலாவாரியாகப் பட்டியலிட்டுள்ளார்கள். ஆளுனரும், ''உங்கள் கவலை எனக்குப் புரிகிறது; படித்துப் பார்ப்பேன்; மேலிடத்துக்கு அனுப்பி வைப்பேன்'' என்றெல்லாம் கூறி, தமது அனுதாபம் எந்தப் பக்கம் என்பதை ஒளிவு மறைவு இன்றியே தெரிவித்துள்ளார்.

மெஜாரிட்டி பலம் பெற்றுள்ள ஓர் ஆட்சியை டிஸ்மிஸ் செய்வதில் உள்ள நியாய அநியாயங்கள் ஒருபுறமிருக்க, ஆட்சியின் செயல்பாட்டினை விளக்குவதாக அமைய வேண்டிய ஆளுனர் உரை, அப்படியொன்றும் நம்பிக்கை அளிப்பதாக இல்லை என்பதைச் சுட்டிக் காட்டவே வேண்டும். ஏதோ அவர்கள் தயாரித்தளித்தார்கள்; இவரும் படித்து வைத்தார்.

உதாரணமாக, போலீஸ் துறையை நவீனப்படுத்த இத்தனை கோடி செலவிடப்பட்டுள்ளது என்று புள்ளி விவரம் தருகிறது ஆளுனர் உரை. ஆனால், அதே நேரத்தில் நாளொரு கொலையும் பொழுதொரு கொள்ளையுமாகப் பெருகி வருகிறது. இதைவிட வேதனை, சட்டத்தைக் காக்க வேண்டிய போலீஸ் நிலையங்களே, அராஜகத்தின் மையங்களாக உருமாறி வருவதுதான். விடுதலைப் புலிகள் தப்புவதோ நமக்குப் பழகிவிட்டது. அவர்களுடைய கடலோரக் கடத்தல்கள் சகஜ வாழ்வின் ஓர் அங்கமாகி விட்டன! இத்தகைய சூழலில் ''ஜெயலலிதா தாமே கவனிக்கிறார்; சட்டம் - ஒழுங்கு கச்சிதமாக இருக்கிறது'' என்றால், யாருக்குத் தான் நம்பிக்கை பிறக்கும்? உரையைப் படித்தவரே உள்ளூரச் சிரித்துக் கொண்டிருந்தால் வியப்பில்லை.

சட்டம் ஒழுங்கு பிரச்னையை விடக் கேவலம், இன்று லஞ்ச ஊழல் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தக் கூத்தாடுவதுதான்! வரலாறு காணாத வகையில் மந்திரிகள் லட்ச லட்சமாகத் திரட்டி, முதல்வரிடம் கோடி கோடியாகக் குவிக்கிறார்கள். இப்படி மூட்டை கட்ட முடிவது எப்படி என்பதற்கு விளக்கம் இல்லை. லஞ்ச ஊழல்களை நிரூபிக்க சாட்சியங்கள் இல்லாமல் போகலாம். சாட்சியங்களுடன் யாரும் லஞ்சம் வாங்க மாட்டார்கள். ஆனால் கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை. ஒவ்வொரு தமிழ்க்குடிமகனும் லஞ்ச ஊழல் வேதனையை இங்கு நாள் தோறும் அனுபவித்து சகித்துக் கொண்டுதான் வருகிறான்.

இன்னும் விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், படிப்பறிவின்மை, சுகாதாரச் சீர்கேடுகள், குடிநீர்ப் பஞ்சம், மோசமான சாலைகள், நதிநீர்ப் பங்கீடு என்று தமிழகத்தைச் சுற்றி நெருக்குகிற பிரச்னைகள் ஏராளம். இவற்றையெல்லாம் அரசு எப்படி சந்தித்து, எவ்வாறு சமாளிக்கப் போகிறது என்பதற்கு ஆளுனர் உரையில் ஒரு குறிப்பும் இல்லை. ஆளும் கட்சி எம்.எல்.ஏ.க்கள் மேஜை தட்ட வசதியாக ஜெயலலிதாவுக்குப் பரணி பாடியதோடு சரி! ஆளுனர் உரையை ஒரு தேர்தல் பிரசாரச் சொற்பொழிவாக்கி விட்டார்கள்.

பிரசார பலத்தால் 'ஜெ' ஆட்சியில் பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடுவது போன்ற ஒரு பிரமையை ஏற்படுத்த முயற்சி செய்யலாம். ஆனால் பிரசாரம் யதார்த்தமாகாது. பிரச்னைகளைச் சந்தித்துப் போராடி, வெற்றி பெறுவதே தமிழகத்துக்கு நன்மை செய்யும். சட்டசபையில் ஆளுனரைக் கண்டும் காணாதது போல் நடந்து கொள்ளலாம்; வணக்கம் கூறாமலும் இருக்கலாம். அதேபோல் ஜெயலலிதா அரசு பிரச்னைகளையும் சந்திக்கக் கூசி, கண்டும் காணாதது போல் ஒதுங்குகிறது. இது பொறுப்பற்ற போக்கு.

வடக்கே ஒரு மசூதி இடிப்பு, பி. ஜே. பி. யின் வீழ்ச்சி; இங்கோ மசூதி, கோயில் இரண்டுமே தகர்க்கப்பட்டுள்ளன! இது எதன் ஆரம்பம்?

# ஏழுமலையானுக்கு எம்.எஸ்.ஸின் ஆறாவது காணிக்கை!

ஆந்திர முதல்வரிடமிருந்து ஒலிப்பேழையைப் பெறுபவர் செங்கல் ரெட்டி.

ஆறு முப்பது என்றால் வினாடி பிசகாமல் மேடை ஏறி தமக்குரிய ஆசனத்தில் அமர்ந்து விட்டார் ஆந்திரா முதல்வர் விஜய பாஸ்கர ரெட்டி. அவரது 'கன் டய'த்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் விழா நிர்வாகிகள் சற்று தடுமாறித்தான் போவார்கள்! என்ன விழா அது?

எம்.எஸ். அவர்களின் அன்னமாச்சாரியார் கீர்த்தனைகள் கேஸட் வெளியீட்டு விழா. ஏற்கெனவே பாலாஜி பஞ்சரத்ன மாலா என்ற தலைப்பில் ஐந்து கேஸட்டுகளை ஏழுமலையானுக்குச் சமர்ப்பித்துள்ள எம்.எஸ்.ஸின் சமீபக் காணிக்கை.

''எம்.எஸ்.ஸின் பாட்டிலே இந்தியாவின் ஆன்மாவைக் காண்கிறேன்'' என்று கவிக்குயில் சரோஜினி நாயுடு கூறியதை நினைவு கூர்ந்த விஜயபாஸ்கர ரெட்டி, எம்.எஸ்.ஸின் உள்ளம் தியாகத்தின் வடிவமாக இருப்பதைச் சுட்டிக் காட்டினார். சதாசிவம்-எம்.எஸ். தம்பதி எளிய வாழ்க்கை மேற்கொண்டு இசையின் பயனாகக் கிடைக்கும் திரவியத்தையெல்லாம் இறைப்பணிக்கும் அறப்பணிக்குமே அர்ப்பணித்து வருகிறார்கள் அல்லவா? இந்த ஒலி நாடாவின் ராயல்டி தொகையும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்துக்கே சேர்கிறது.

விஜயபாஸ்கர ரெட்டி, காஞ்சி பரமாச்சார்யாரின் யோசனைப்படி இந்த திட்டத்தை, சதாசிவம் - எம்.எஸ். தம்பதி மேற்கொண்டதும், அன்னமாச்சாரியார் ஊருக்குப் போய் அவர் பிறந்து, தவழ்ந்த இடங்களைப் பார்த்து வந்ததைக் குறிப்பிட்டார். ''ஒரு விஷயத்தில் ஈடுபாடு என்றால் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு இது உதாரணம்'' என்றவர், அதே ராயலசீமை பகுதிதான் தமக்கும் பூர்வீகம் என்பதில் பெருமையுற்றார்.

ஏழுமலையானைக் குறித்துப் பல்வேறு ஒலி-ஒளிப் பேழைகளைப் பதிவு செய்யும் தேவஸ்தானத்தின் திட்டத்துக்கு இயக்குநராக நியமிக்கப்பட்டவர் காமிசெட்டி ஸ்ரீநிவாசுலு. அவரது பேச்சு, எம்.எஸ்.ஸின் சமீபத்திய ஒலி நாடாவுக்கு ஒரு விமர்சனமாக மட்டுமின்றி, தாம் வகிக்கும் பதவிக்கு ஸ்ரீநிவாசுலு எவ்வளவு பொருத்தமானவர் என்பதையும் உணர்த்தியது. ''அன்னமாச்சாரியாரின் பல பாடல்களைப் பிரபலப்படுத்த இன்று வித்வான்கள் முயற்சி எடுத்து வருகின்றனர். அவர்களில் முன்னணியில் இருப்பவர் எம்.எஸ். என்றார் ஸ்ரீநிவாசுலு. ஒலிப் பேழையில் உள்ள பாடல்களுக்கு இசை அமைக்க கடையநல்லூர் வேங்கடராமன் எடுத்துக் கொண்ட முயற்சிகளையொட்டி, ''அவரை ராமபக்த அனுமான் என்றே வர்ணிக்கலாம்; அத்தனை பக்தி சிரத்தை'' என்றார்.

உண்மைதான். கல்யாணி ராகக் கீர்த்தனைக்கு அவர் அமைத்துள்ள சிட்ட ஸ்வரங்கள், அப்பாடலிலேயே குறிப்பிடப்பெறும் அலர்மேலுத் தாயாரின் கடைக்கண் பார்வைபோல் அத்தனை அழகுடன் ஜொலிக்கின்றன.

''பாவப்பிரதானமா, பக்திப்பிரதானமா, நாதப்பிரதானமா என்று நிர்மானிக்க முடியாமல் மூன்றும் இணைந்த ஒன்று'' என்று கேஸட்டை வர்ணித்த ஸ்ரீநிவாசுலு, தெலுங்கு உச்சரிப்பு சுத்தமாக அமைய எம்.எஸ்.எடுத்துக் கொண்ட சிரத்தையை எண்ணி, எண்ணி, வியந்து போற்றினார்.

'''ரா, ரா, சின்னன்னா' என்று எம்.எஸ். என்றும் மாறாத தமது இனிய இளமைக் குரலில் அழைக்கும் போது அவர் யசோதையாகவே மாறிவிடுகிறார்'' என்றார் ஸ்ரீநிவாசுலு. எம்.எஸ்.ஸைவிட பாடலைக் கேட்கும் நாம் அதிர்ஷ்டசாலிகள்! ஏனென்றால் எம்.எஸ். யசோதையாகத்தான் மாறுகிறார்; நாமோ சின்னக் கண்ணனாகவே மாறி விடுகிறோம்!

- குட்டி கிருஷ்ணன்



◆ மன்மோகன் சிங் போன்ற அபாரமான மூளை உள்ளவர்கள், எக்கச்சக்கமான தந்திரம் உடையவர்கள், இந்திய நாட்டின் சராசரி மனிதனின் நலனைக் கவனத்தில் கொண்டு பட்ஜெட் தயாரிக்காமல் அரசியல் சோரம் போகின்றார்களே என்ற ஆதங்கம் இப்பொழுது எல்லோர் மனத்திலும் ஏற்பட்டிருக்கிறது. எந்த நாட்டிற்குமே பண வீக்கம் என்பது மிக மோசமான வியாதி. அதிலும் நம் இந்தியத் திருநாட்டிற்கு பண வீக்கம் மிகவும் அபாயகரமான விளைவுகளைத் தோற்றுவிக்கும். இதனைப் புரிந்து கொண்டு நம் நாட்டின் நிதி அமைச்சர் தேசப் பொருளாதாரத்தைச் சீர்படுத்த வேண்டும். செய்வாரா?

திருச்சுழி. கந்தர் அழகேசன்.

◆ தலையங்கத்தில், மன்மோகன் சிங்கின் பட்ஜெட்டை இந்த இடி இடித்திருக்கிறீர்களே. தாங்கள் குறிப்பிட்டது போல் அரசின் டம்பாச்சாரி செலவினத்தில் கை வைத்தாரானால் அவரது பதவியில் கைவைத்து விடுவார்களய்யா!

மதுரை - 9. இரா. கல்யாணசுந்தரம்.

## ஜோர்ட்டூன்

◆ மத்திய பட்ஜெட் பற்றிக் குறை சொல்லிக் கொண்டே மின் கட்டணத்தை உயர்த்தும் தமிழக அரசு பற்றிய கார்ட்டூன் படு அமர்க்களம்!

அரவக்குறிச்சிப்பட்டி. எம். அசோக்ராஜா.

## காசுக்குக் கனவுகள்

◆ 'லாட்டரி டிக்கெட்' குறித்த கட்டுரை கண்டேன். இப்போதெல்லாம் காந்திப் பெரியவர், மஹாகவி பாரதியார், விவேகானந்தர் போன்ற மகான்களின் படங்களையெல்லாம் தாங்கி லாட்டரிகள் வெளிவர ஆரம்பித்துள்ளன. மதுரை, திருப்பரங்குன்றம் போன்ற சுற்றுலா மற்றும் புனிதத் தலங்களிலேயே கோவில் வளாகங்களுக்குள் 'லாட்டரி' விற்கும் சிறுவர்கள், மற்றும் இளைஞர்கள் நச்சரிப்பு அதிகமாகி வருகின்றது. மேலும், லாட்டரிப் பைத்தியத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் குடும்பங்களை நேரில் காணும் சந்தர்ப்பங்களும் ஏராளம் உள்ளன. போதைப் பழக்கங்களுக்கெதிராகப் போர் தொடுப்பது போல, முழுவீச்சில் இந்தப் 'பணக்காரக் கனவுகளை' காசுக்கு விற்பதையும் ஒழிக்க வேண்டும்.

பரமக்குடி. எஸ். ஹரிஹரன்.

## ஹீரோராஜ்

◆ வில்லன் நடிப்பில் மட்டுமல்ல, வித்தியாசமான கேள்விகளுக்கு நகைச்சுவை ததும்ப விவரமான பதில் தருவதிலும், தான் ஹீரோ என்பதை நிரூபித்து விட்டார் நாகராஜ சோழன் - மணி - சத்யராஜ்.

சீர்காழி. எஸ். நடராஜ்.

## கொக்கொக்கோ

◆ வை.கோ.வைப் பற்றிய கேள்விக்கு, வை.கோ. எப்போது மெய்.கோ. எப்போது பொய்.கோ. என்று கணிக்க முடியாதென்று எதுகை மோனையோடு பதிலளித்த நீங்கள் எப்போது ஆனீர்கள் கவிக்கோ...?!

சேலம் - 2. சூர்யநிலா.

## இதையும் உல்டா!

◆ 'ஒரு சினிமாப் பாடலின் பிரபல வரி'யில் நிறைப்பாடல்களை விளாசித் தள்ளி இருந்தார் சத்யா! கதையில் வரும் பாட்டை எவர் முந்தி உல்டா செய்யப் போகிறார்களோ!

திட்டக்குடி. அ. சரவணராசன்.

## சித்திரிப்பில் வேதனை

◆ துணை இழந்த நிலையில் பாழ்பட்டு நிற்கும் சகோதரிகள், சமூகத்தின் குறுகிய பார்வையில், சகுனம் என்கிற பெயரில் எப்படியெல்லாம் காயப்படுத்தப்படுகிறார்கள் என்பதை வேதனையுடன் சித்திரித்திருக்கிறார் மேலாண்மை.

திருச்சி - 4. தாயு. செந்தில் குமார்.

## வீடு கட்ட ஆசை

◆ வீட்டைக் கட்டிப்பார், கிரவுண்டை வாங்கிப்பார் இலவச இணைப்பு கண்டேன். சொந்தத்தில் பிளாட் வாங்கி, வீடு கட்டுவது என்றால் தம்மால் இயலாத ஒன்று என்று எண்ணி ஒதுங்கியிருப்பவர்களுக்குப் பயனுள்ள வகையோடு. கஷ்ட நஷ்டங்களை விரிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறீர்கள். பாராட்டுக்கள்.

கும்பகோணம். டி.எஸ். சீதாராமன்.

◆ நேரடியாகச் சொன்ன 'கிரவுண்டை வாங்கிப்பார்' யோசனைகளை விட கதை போலச் சொன்ன 'வீட்டைக் கட்டிப்பார்' யோசனைகள் அருமை. வீடு கட்டும் ஆசையை உள்ளத்தில் விதைத்து விட்டதே, இலவச இணைப்பு!

சென்னை - 14. ஜயபாது வாசுதேவன்.

◆ தொடர்ந்து தரும் இலவச இணைப்புகள் மகிழ்ச்சியைத் தந்தாலும், விலையேற்றத்திற்காக அடிபோடுகிறீர்களோ என்ற பயமும் மனத்தில் தோன்றுகிறது!

ஆனந்தூர். டி. வெங்கட்.

# வைஜெயந்தி Alias லட்டு முழுங்கி

**வை**ஜெயந்தியைத் தவிர வேறு யாரையும் மனசால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை.

இன்றுவரை அவள் மேல் உள்ள காதல், சலசலவென்று மெல்லிய இழையாக ரத்த ஓட்டத்துடன் ஓட்டமாக ஓடிக் கொண்டிருக்கிறது. அந்த ஓட்டத்தில் சின்னச்சின்ன மீன்களாகக் காதல் நினைவுகள் துள்ளிக் கொண்டோடுவதை எனக்குள்ளே ரசிப்பதும், தண்ணீர்த் துளிகள் பட்டுத் தெளிந்து சிலிர்ப்பதுமாக இவ்வளவு வருடம் ஓட்டி விட்டேன்.

வீட்டில் கல்யாணப் பேச்சு எடுக்க ஆரம்பித்ததும் மனசு ஏங்க ஆரம்பித்தது. அவளை நினைத்துக் கொண்டு, வரும் வரன் களையெல்லாம் துச்சமாக ஒதுக்க ஆரம்பித் தேன். ஆறு வருடம் அசட்டுத்தனமாக இருந்துவிட்டேனென்று உறைக்க ஆரம் பித்தது.

வைஜெயந்தி, நீ எங்கே இருக்கிறாய்? இருந்தால் கல்யாணமாகாமல் இரு! இரேன்!

காதலை வெளிக்காட்டாமல் ஒருவரை ஒருவர் எவ் வளவு புரிந்து கொண்டு நேசித்தோம்? இந்தக் காதல் திடீர் மழையில் முளைத்த நாய்க்குடையல்ல! பள்ளிப் பருவத்தி லிருந்து பார்த்துப் பார்த்து ரசித்து வியந்து ஆழ்மனத்தில் பிசகு தட்டாமல் வாஞ்சை யாக இஞ்ச் இஞ்ச்சாக செதுக்கிய சிற்பம் இது.

முதல் முதலில் இருபது வருடங்களுக்கு முன்பு ஒரு கல்யாண நலங்கில்தான் அவளைப் பார்த்தேன். "போறும், போறும், பேருக்குத் தலை வாரினா போறும்! மீதிய சாவகாசமா சாந்தி கல் யாணத்துல வாரிக்கோ!" யாரோ பாட்டி, மாப்பிள்ளையை வாரினாள்.

மாப்பிள்ளை அசடுவழிந்து, வழிந்த அசடை மடிமீது உட்கார்ந்திருந்த குழந்தையின் கன்னத்தைக் கிள்ளி, கொஞ்சி நைஸாக வழித்துவிட்டார்.

மாப்பிள்ளைக்கு மேல் வெட்கப் பட்டுக் கொண்டு, யார் இந்தக் குட்டிப் பெண்? களை சொட்டியது.

"ஏண்டி..... வைஜெயந்தி! ஒருபாட்டு சொல்லேன்!" அவள் அம்மா அதட்டினாள்.

வைஜெயந்தி! மெல்லிசாக உதட்டில் முணுமுணுத்தேன். 'பாம்பே டெல்லியில் தான் இந்த மாதிரிப் பெயர்கள் வைத்துக் கொள்வார்கள் என்று நினைத்துக் கொண் டேன்.

"ராஜாவின் பார்வை ராணியின் பக்கம்
கண்தேடுதே சொர்க்கம்; கை மூடுதே வெட்கம்."

பாடல்வரிகள் ஏற்படுத்திய கூச்சத்தில் நெளிந்து, தலை குனிந்து கொண்டு பாடி னாள். பஹ பஹவென்று இரண்டு முறை நடுவில் சிரித்து, கிண்டல் பண்ணி, பாட விடாமல் கலாட்டா பண்ணினார்கள், சுற்றியிருந்தவர்கள். ஒருவழியாகப் பாடி முடித்தாள். எல் லோரும் கைதட்டி பாராட்டி னோம். என் கைத் தட்டல் மட்டும் சற்று திமிறிக் கொண்டு கேட்க, சற்று வெட்கத் தோடு என்னைப் பார்த்தாள்.

என் மனத்திற்குள் டொக் டொக் கென்று குதிரை பிய்ச்சிக் கொடுத்தது வைஜெயந்திக்குத் தெரியாது.

"உங்கப் பொண்ணா? நன்னா பாட றாளே! பாட்டு கத்துக்கறாளா?" என் அம்மா கேட்டாள்.

"இன்னும் கூட நன்னாப் பாடும்... சனியன்..." வைஜெயந்தியின் அம்மா அலுத்துக் கொள்கிற மாதிரி தற்பெருமை யடித்துக் கொண்டாள். இருவருக்கும் இப் படித்தான் பேச்சு ஆரம்பித்தது. இது நல்லியா, இது குமரனா என்று புடைவை பார்டரைத் தொட்டுக் கொண்டே ரொம்ப நேரம் தொடர்ந்தது. இருவரும் குரோம் பேட்டைவாசி என்று தெரிந்ததும் ரொம்பப் பிடித்துப் போனது. இரவு டின்னரில் ஒரு வருக்காக இன்னொருத்தர் இடம் போட்டு உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டே அரட்டை அடிக்கும் அளவுக்கு நெருங்கி னார்கள்.

இது தவிர இருவருக்கும் மூட்டுவலி, சர்க்கரை வியாதி, குலதெய்வம் வைத்



நீஸ்வரன் கோவில் போன்றவை பொதுவா யிருந்தது இன்னும் நெருக்கமாக்கியது.

'பெண்ணாத்துக்காரருக்கு மனுஷாளே இல்ல' என்று அம்மா பேசிக்கொண் டிருக்க, நான் வைஜெயந்தியை நொடிக் கொருதரம் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டே சாப்பிட்டேன். இது பொறுக் காமல் அப்பளத்தை பட்டென்று இலையில் கோபமாக நொறுக்கி அழகு காட்டினாள்.

அழகு காட்டும் போது ரொம்ப அழ காக இருந்தாள். முகத்தை சுளிக்கும் போது உள்ளே இருந்த சிரிப்புதான் இதற்குக் கார ணம்.

லட்டு வந்தது. இலையில் போட்டுக் கொள்ளாமல் கையில் வாங்கி பாக் கெட்டில் போட்டுக் கொண்டேன்.

'சீ! கர்மம்' என்று வைஜெயந்தி தலை யில் அடித்துக் கொண்டு எழுந்தாள்.

**ம**ண்டபத்தை விட்டு நாங்கள் நால் வரும் மாம்பலம் ஸ்டேஷனுக்குள் நுழை யும் போது லேசாகத்தான் தூர ஆரம்பித்தது. டிரெயினில் ஏறி உட்கார்ந்ததும் மழை பல மாகப் பிடித்துக் கொண்டது.

''அம்மா... ஏன் மழை பெய்யறது தெரி யுமா?'' திடீரென்று கேட்டாள்.

''தெரியல்லடி கோந்தே...''

மாப்பிள்ளையும் பொண்ணும் நெறைய அரிசி தின்னுருக்கா'' எல்லோரும் சிரித்தோம். நான் சிரித்தது அவளுக்குப் பெருமை பிடிபடவில்லை. எனக்குத் தோன் றாமல் போய் விட்டதேயென்று பொறா மைப் பட்டேன்.

எட்டிக்குப் போட்டியாக நானும் ஏதா வது சொல்லி அசத்த தீவிரமாக யோசித் தேன். வாய் திறந்து சொல்ல வருவதற்குள் ஸ்டேஷன் வந்துவிட, அவர்கள் வீடு இருக் கும் பாரதிபுரம் பக்கம் திரும்பிப் போய் விட்டார்கள். ஏமாற்றமாக இருந்தது.

**ச**ந்தித்த அடுத்தமாதம் வைஜெயந்தி யின் குடும்பம் எங்கள் வீட்டுக்குப் பக்கத் திலியேயே குடி வந்தார்கள். வைஜெயந்தி என் பள்ளிக்கூடத்தில் - அதுவும் என் வகுப் பிலேயே சேர்ந்தாள். வைஜெயந்தியை எனக்கு முன்னமே தெரியும் என்று பீத்திய பீத்தலில் மாணவர்கள் என் மீது பொறாமை கொண்டார்கள்.

எஸ்.எஸ்.எல்.சி அரையாண்டுத்

**கே.ரவிசங்கர்**

தேர்வு லீவில் எங்கள் பள்ளியில் மாஜிக் ஷோ நடந்தது. ரெட்டைப் பின்னல் பின்னிக் கொண்டு அன் யூனிஃபார்மில் ரொம்ப அழகாக வந்திருந்தாள். அவள் அம்மாவின் ஹெச் எம்டி வாட்ச் கட்டியிருந்தாள்.

ஒவ்வொரு மாஜிக்கும் ரசிக்கப்பட்டு கைத்தட்டலும் கும்மாளமுமாகப் போய்க் கொண்டிருந்தது. பார்த்தவுடன் நானும் பிற்காலத்தில் மாஜிக் மாஸ்டராகப் போக வேண்டும் என்று ரொம்ப ஆசையாக இருந்தது.

மாஜிக் மாஸ்டர் மேஜையின் மீது ஒரு முட்டையை வைத்தார். அதை ஒரு தொப்பியால் மூடினார். கையை ஆட்டி மந்திரம் போட்டார். யாரையாவது மேடைக்கு வரச் சொன்னார். மந்திரம் கிந்திரம் போட்டு விடுவாரென்று எல்லோரும் பயந்து ஒளிந்தார்கள். வைஜெயந்தி மட்டும் சற்று கூச்சப்பட்டுக் கொண்டு தலையைக் குனிந்து கொண்டு மேடைக்குப் போனாள்.

அவர் சொன்னபடி தொப்பியை எடுத்தாள். முட்டை லட்டாக மாறியிருந்தது. மாணவர்கள் ஆச்சர்யம் தாங்காமல் ஆரவாரம் செய்தார்கள்.

லட்டு தானா என்று ஆச்சரியப்பட்டு வைஜெயந்தி தொட்டுப் பார்த்தாள். சந்தேகம் தீராமல் லட்டை விண்டு சாப்பிட்டாள். 'ஏய் லட்டு முழுங்கி' என்று கேலியாட்டினார்கள் மாணவர்கள். கன்னங்கள் உப்ப, சிரித்துக் கொண்டே லட்டை மென்றாள்.

அடுத்தது மெஸ்மரிசம். அவளையே மேடையில் படுக்கவைத்து மொண மொணவென்று ஏதோ மந்திரம் சொல்லி மெதுவாக அவளைத் தூங்க வைத்தார். தூங்கும் போஸில் ஒரு குட்டி தேவதையாகத் தோன்றினாள்.

தூங்கி விட்டாளே! திரும்ப வருவாளா? ஒளித்து வைத்து விடுவாரா. நாய்க் குட்டியாக மாற்றி விடுவாரென்று பன்னீர் செல்வம் ஹாஸ்யம் செய்தான். அழுகை

வந்துவிடும் போலிருந்தது.

மாஜிக் ஷோ லேட்டானால் நான்தான் இருந்து துணையாக அழைத்து வர வேண்டு மென்று அ ம் ம ா சொல்லியிருந்தாள். ஹெச்எம்டி வாட்ச் பத்திரமாகயிருக்கிறதா வென்று வைத்த கண் வாங்காமல் கலக்கத் துடன் பார்க்க ஆரம்பித்தேன். தூங்க வைத்த வுடன் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். எல்லா கேள்விகளுக்கும் டாண் டா வென்று பதில் சொன்னாள். கடைசியாக ஒரு கேள்வி.

''ஓ... லட்டு முழுங்கி... உனக்கு யார ரொம்பப் பிடிக்கும்?''

''என் டியரஸ்ட் பிரெண்ட் ஆர். உமா சங்கர்.''

அரங்கம் அதிர்ந்தது. எல்லோரும் என்னை எட்டி எட்டிப் பார்த்தார்கள். எனக் குத் தலை முதல், கால் வரை ஜில்லென்றது. பயமும் திகிலும் மாறி மாறி வந்து திகிலாக யிருந்தது.

வைஜெயந்தி ஒன்றும் புரியாமல் சிரித் துக் கொண்டே சந்திரா டீச்சர் பக்கத்தில் உட் கார்ந்து கொண்டாள். மாஜிக் ஷோ முடிந்து, விடுவிடுவென வெளியே வந்து நடந்தேன். வைஜெயந்தியும் என்னைத் தேடிப் பிடித்து என் கூடவே நடந்து வந்தாள். ஹெச் எம் டி வாட்ச் அவள் கையில் பத்திரமாகயிருந்தது. அவள் வீடு வந்தது. 'குட் நைட்ரா உமா சங்கர்' என்று சொல்லி கையில் எதையோ திணித்தாள். பார்த்தேன். பாதி லட்டு. கையில் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு பிதுந்து கொண்டே வீடு போய்ச் சேர்ந்தேன்.

ரொம்ப ஷேமாகிவிட்டதால் மறு நாள் பள்ளி செல்ல வெட்கமாகயிருந்தது. வைஜெயந்தியும் பள்ளி செல்லவில்லை. அவளுக்கு ரொம்ப திருஷ்டி பட்டு விட்ட தென்று அவள் அம்மா அனுப்பவில்லை. நான் அந்த லட்டுத் துகள்களை பயந்து பயந்து சாப்பிட்டு முடித்தேன். பன்னீர் செல்வம் சொன்ன மாதிரி நாய்குட்டி அல்லது பூனைக் குட்டியாகி விடுவேனோ என்ற பயம்தான் காரணம்.

நானும் வைஜெயந்தியும் பட்டப் படிப்பு முதலாண்டுவரை ஒன்றாகவே படித்து, பேசிப் பழகி வந்தோம். வயதும் மற்ற பருவ மாற்றங்களும் உடம்பில் லேசாக ஏற ஏற, கொஞ்ச கொஞ்சமாக உள்ளுக்குள் புகைமூட்டம் கலைந்தது. கலைந்ததும் இவ்வளவு நாள் உருவத்தோடு இல்லாமல் எதையோ பொத்தி பொத்தி வளர்த்தது தெரிந்தது. ஆவல் தாங்காமல் நைலாக ஒருவித குறுகுறுப்போடு ஒருவர் மனத்திற்குள் ஒருவர் எட்டிப் பார்த்தோம். அது என்ன, குட்டியாக தளிர் விட்டுக் கொண்டு... அட.... காதல்! பூத்திருக்க வெட்கத்த விட்டு....!




●● 'வாயை மூடு' என்று முட் டாள், தன் மனைவியைத் திட்டு கிறான். 'நீ அமைதியாக இருக்கும் போது எவ்வளவு அழகாக இருக் கிறாய் தெரியுமா?' என்கிறான் புத்தி சாலி.

- வாரியார்

தகவல் : இரா. பார்த்திபன்

இடையென்று ஒரு நாள் அவள் அப்பா விற்கு வேலை மாற்றலாகி ஜெய்ப்பூர் போனார்கள். என்னால் பிரிவைத் தாங்க முடியாமல் சுவக்களை தட்டியது. அம்மா வும் வைஜெயந்தியும் கண்ணீர் முட்ட கட்டிக் கொண்டார்கள்.

''எங்க போயிடப் போற. எங்காத்து மாட்டுப் பொண்ணா வந்து குதிக்க என்னை கவனிச்சுக்கப் போற...'' கண்களைத் துடைத்துக் கொண்டே குங்குமம் கொடுத் தாள். வைஜெயந்தி வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டே குங்குமம் இட்டுக் கொண்டாள். என்னவோ அம்மாவை அப் போது ரொம்பப் பிடித்தது எனக்கு.

அம்மா, வைஜெயந்திதான் மருமகளாக வர வேண்டுமென்று என்றோ முடிவு செய்து விட்டாள். வைஜெயந்தியின் அடக்க ஒடுக்க மும், குடும்பப்பாங்கும் அழகும் பதவிசும் அம்மாவுக்கு சின்ன வயசிலேயே பிடித்துப் போய், தீர்மானித்திருந்தாள்.

போனவள் போனவள்தான். நடுவில் ரொம்ப ஜரூராகத் தொடர்பு இருந்தது. அப் புறம் கொஞ்ச கொஞ்சமாகக் குறைந்து சுத்த மாக நின்று போனது. ஏன் என்றே தெரிய வில்லை. ஏழு வருடம் ஓடிவிட்டது. இப் போது மனசு அவளுக்காக ஏங்கி ஏங்கித் தவிக்கிறது.

கஷ்டப்பட்டு முயற்சி செய்து அவளைப் பற்றிய விவரங்களைக் கண்டு பிடித்தேன்.

ரொம்ப சந்தோஷமான விவரம் - அவளுக்கு இன்னும் கல்யாணமாக வில்லை. டெல்லியில் ஒரு அயல் நாட்டு வங்கியில் ஆபிஸராக உள்ளாள். மூன்றா



"என்ன ஸார் இது? உங்க ஒய்ஃப் எழுதின ஜோக்ல கொஞ்சம் கூட ஹ்யூமர் இல்லையே!"

"குடுத்து வச்சவன்யா நீ. தைரியமா சொல்லிட்டே!"

- ரோகிணி

வது. சென்னையிலிருந்து வெளியாகும் பெண்கள் பத்திரிகையில் எழுதுகிறாள். கட்டுரைகள் வாரா வாரம் போட்டோவுடன் வெளியாகிறது.

சந்தோஷமாக ஒரு பத்து இதழ்களை வாங்கிக் கொண்டேன். ரொம்ப ஆர்வமாகப் படிக்க ஆரம்பித்தேன்.

கட்டுரைகளைப் படித்தவுடன் சப்பென்று ஆகிவிட்டது. நான் ஏங்கிய ஏக்கத்திற்கெல்லாம் அர்த்தமில்லாமல் போய் விட்டது. போட்டோவில் Baggy Jeans போட்டுக் கொண்டு, தலையை ஷ்டைலாக கட்டிக் கொண்டிருந்தாள். எனக்கு என்னவோ போல் இருந்தது. குழம்பியபடி தூங்கிப் போனேன்.

காலையில் அம்மா காப்பி கொடுத்து விட்டு, தயங்கித் தயங்கி நின்றாள்.

"படிச்சியா? இது தோதுப்பட்டு வராது. நீ ஒரே பையன் எங்களுக்கு. நமக்கு வேளா வேளைக்கு நன்னா சமைக்கப் போட்டு அடக்க ஒடுக்கமா, அன்பா, அனுசரணையா ஆத்தோட இருக்கணும். இது என்னடான்னா... பொம்மனாட்டி சுதந்திரம், சம உரிமைன்னு பேசிண்டு அடங்காப்பிடாரித்தனமா இருக்கு போலப் படறது. இது நாளன்னைக்கும் பட்டிமன்றம், டிபேட் அதுஇதுன்னு அலைஞ்கண்டு திரியும் போல இருக்கு. எதுக்கெடுத்தாலும் மல்லுக்கு நிற்கும். உன்னோட அட்ஜஸ்ட் பண்ணிண்டு போகாது. அப்புறம், கல்யாணங்கறது ஆயிரம் காலத்துப் பயிர்... இது, எதுக்கு வேஸ்ட்டு, மால மாத்திண்டா போறுங்கும். இங்க இருந்தப்ப நன்னாத்தானேயிருந்தா. குட்டிகையா அடக்க ஒடுக்கமா... என்ன கேடு வந்தது?"

"அம்மா... ஸ்டாப்... ப்ளீஸ்..." என்னால் வைஜெயந்தியைத் திட்டுவது பொறுக்க முடியவில்லை.

வைஜெயந்தி மெட்ராஸ் வருவதாகத் தகவல் வந்தது. ஏதோ மகளிர் மேளா. ஊர்வலம். மாநாடு. அரை அரசியல்வாதி ஆகிவிட்டாள் போலும். சின்னதாக ஒரு நப்பாசை. போய்ப் பார்த்தால்.....?

கலர் கலர் ஷாமியானா கட்டி, எவர்சில்வர் பக்கெட்களில் காப்பி வழங்கி, மைக்கில் அலறிக் கொண்டிருந்தார்கள். நான் வைஜெயந்தியைப் பார்த்துவிட்டேன். ஐயோ, என்ன ஒரு மலர்ச்சி! டைட் பேண்ட்டும் டி ஷர்ட்டும் குதிரை வால் ஜடையும், பப்பிள்கம் மெல்லும் வாயும்...

'ஹாய்' என்றாள் என்னைப் பார்த்து.

பதிலுக்குச் சொல்ல என்னிடம் ஒன்றுமில்லை.

"எப்படி இருக்கே? கல்யாணமாயிடுத்தா? எத்தனை குழந்தை? ஒய்ஃப் எப்படி? பாப்பாவா, பீப்பாவா?"

"இல்லை.... இன்னும் இல்லை... நீ....?"

"காட்! எனக்கு கல்யாணமா? ஐ டோண்ட் பிலீவ் இட். இன்ஃபாக்ட் ஒரு காலத்துல உன்னையே கூட லவ் பண்ணலாமான்னு யோசிச்சேன். நல்ல வேளை. நீ தப்பிச்சே!"

தொடர்ந்து வந்த உரையாடல்கள் அநாவசியம். பாதி மாநாட்டில் நான் நழுவி விட்டேன்.

வைஜெயந்தி இப்போது லட்டு முழுங்கி இல்லை. அவள் வேறென்னவோ ஆகிவிட்டாள். அல்லது இவள் என் வைஜெயந்தியே இல்லை. மனசுக்குள் அவளை அழிப்பது அத்தனை சுலபமாக இல்லை.

வீட்டுக்குப் போனதும் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்தி, கட்டிலில் உட்கார்ந்தேன்.

என்றோ ஸ்கூல் நாளில் எடுத்த ஒரு குரூப் ஃபோட்டோவை எடுத்து, பார்த்தபடி இருந்தேன். அதில் வைஜெயந்தி இருக்கிறாள். குட்டைப் பாவாடையும் ஜிமிக்கியுமாக.

"என்னடா பண்றே?"

சட். அம்மா எப்போது உள்ளே நுழைந்தாள்?

"ஒண்ணுமில்லம்மா."

"எங்க போயிருந்தே, கார்த்தாலேர்ந்து?"

"சும்மா வெளில...."

"பக்கத்தாத்து வெங்கிட்டு, என்னவோ நல்ல வரன் வந்திருக்கு, பார்க்கறேளான்னான். நான் என்ன சொல்லட்டும்?"

"உன் இஷ்டம்மா" என்றேன், மறுபுறம் திரும்பி, ஒரு சொட்டு கண்ணீர் விட்டபடி.

## அமரர் கல்கி

அன்றிரவு சுமார் பத்து மணிக்கு உமாராணி தன்னுடைய படுக்கை அறைக்குள் வந்த போது, சாரு வழக்கம்போல் கட்டிலின் மீது மெத்தையில் படுத்துக் கொள்ளாமல், கீழே தரையில் படுத்துத் தூங்குவதைக் கண்டு துணுக்கமுற்றாள். குழந்தையை இரண்டு கையாலும் அணைத்து எடுத்துக் கட்டிலின் மீது போட்டாள். சாரு ஒரு தடவை புரண்டு, வாயோடு, ''தாத்தா! தாத்தா!'' என்று சொல்லிவிட்டு, மறுபடியும் தூங்கிப் போனாள்.

''தாத்தாவைப் பார்க்காமல் குழந்தை ஏங்கிக் கிடக்கிறது. ஐயோ! இவளை இப்படிப் பிரித்து வைத்திருக்கிறேனே, பாவி!'' என்று உமா தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். சாருவை அழைத்து வந்த நாளிலிருந்து உமாவின் மனத்தில் இந்தப் போராட்டம் நடந்து கொண்டுதான் இருந்தது. அப்பாவிடம் எல்லாவற்றையும் சொல்ல வேண்டும், அவரையும் தன்னுடன் வந்து இந்த வீட்டில் இருக்கச் சொல்ல வேண்டும் என்று ஒரு பக்கம் ஆசை பொங்கிற்று. இன்னொரு பக்கம், 'அப்பா என்ன சொல்வாரோ, என்னவோ? நான் சொல்வதை முதலில் நம்புவாரா? நம்பினாலும், என்னிடம் வெறுப்பு கொள்ளாமல் இருப்பாரா? ஒரு வேளை மறுபடியும், அவர் தேடிக் கொடுத்த அழகான மாப்பிள்ளையுடன் போய் வாழ வேண்டுமென்று சொன்னால் என்ன செய்வது?'' என்று ஆட்சேபங்கள் தோன்றின.

உண்மையை அவரிடம் சொல்வதாயிருந்தாலும் எப்படிச் சொல்வது? நேராகச் சொல்வதற்கு அவளுக்குத் தைரியம் வரவில்லை. ஒரு கடிதம் எழுதி எல்லாவற்றையும் அதில் சொல்லிவிடலாமா என்று அடிக்கடி நினைப்பாள். இன்று குழந்தை தூக்கத்தில், ''தாத்தா தாத்தா'' என்று சொன்னதைக் கேட்டதும், இனிமேல் தாமதிக்கக்கூடாது என்றெண்ணிக் கடிதமும் பேனாவும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

''என் அருமை அப்பாவுக்கு உங்கள் பெண் சாவித்திரி அநேக கோடி நமஸ்காரம்....''

அவ்வளவுதான் எழுதினாள். அதற்கு மேல் யோசித்து யோசித்துப் பார்த்தும் என்ன எழுதுவது, என்னமாய் எழுதுவது என்று தெரியவில்லை. இரண்டு மூன்று தடவை எழுதினதையெல்லாம் கிழித்துப் போட்டுவிட்டு, கடைசியில் நாளைக்கு எப்படியாவது அப்பாவை அழைத்துக் கொண்டு வந்து எல்லாவற்றையும் நேரிலேயே சொல்லி விடலாம் என்று தீர்மானித்தாள். உடனே, 'நாளைக்கு என்ன அவசரம்? ஆறு வருஷ காலம் பேத்தியோடு சதா சர்வ காலமும் இருந்தாரே, போதாதா? நானும் தான் கொஞ்ச நாளைக்கு என் பெண்ணை எனக்கே எனக்கென்று வைத்துக் கொண்டிருக்கிறேனே?' என்று நினைத்தாள். 'ஆமாம்; ஆமாம். இன்னும் கொஞ்ச நாள் நன்றாய்க் கஷ்டப்படட்டும். என்னை மட்டும் கல்கத்தாவிலே அந்த ராக்ஷஸர்களிடம் ஒப்படைத்துவிட்டு, நான் போட்ட கடுதாசிக்கெல்லாம் பதில் போடாமல் இருந்தாரே, அது மட்டும் தேவையா?' என்று எண்ணினாள். இம்மாதிரி சிறிது நேரம் தனக்குள் தானே கோபத்தை வளர்த்துக் கொண்டிருந்துவிட்டு, கடைசியில் அசந்து தூங்கிப் போனாள்.

டங், டங், டங் என்று கடிகாரம் இசையுடன் மணி பன்னிரண்டு அடித்து நிறுத்தியது. சாரு கண் விழித்துப் பரபரப்புடன் எழுந்திருந்து உட்கார்ந்தாள். ''ஐயோ! தாத்தா! உன் கண் பொட்டையாய்ப் போயிடுத்தா?'' என்று முணுமுணுத்துக் கொண்டாள். அவள் கண்ட கனவு, அவள் மனத்தில் தத்ரூபமாய்ப் பார்த்தது போல் தோன்றிக் கொண்டிருந்தது. தாத்தாவுக்குக் கண் குருடாய்ப் போய்விட்டது; சாவடிக் குப்பத்துக் குடிசையில், அம்பிகையின் சந்நிதியில் அவர் எதையோ தேடிக் கொண்டிருக்கிறார். கையினால் துளாவுகிறார்; அவர் தேடுகிற பொருள் அகப்படவில்லை; நகர்ந்து நகர்ந்து போய், பூஜைக்கு அருகில் வைத்திருந்த குத்து விளக்கில் முட்டிக் கொள்கிறார்; அப்படி முட்டிக் கொண்ட போது 'டங்'கென்ற சத்தம் கேட்கிறது.

சாரு விழித்துக் கொண்ட போது, கடிகாரத்தில் கடைசி மணி அடித்தபடியால், அதன் ஓசை கேட்டுக் கொண்டிருந்தது. அதனால் தானோ என்னவோ கனவில் கண்டது

## தியாக பூமி



வாஸ்தவத்தில் நடந்தது போலவே சாருவுக்குத் தோன்றியது.

படுக்கையிலிருந்து அவள் மெல்லக் கீழே குதித்தாள். பக்கத்தில் இன்னொரு கட்டிலில் உமா ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதைப் பார்த்தாள். ஓசைப்படாமல் அந்த அறையிலிருந்து வெளியே போகத் தொடங்கினாள்.

அப்போது, எதிரே சுவரில் இருந்த நிலைக் கண்ணாடியில் அவளுடைய பிரதிபிம்பம் மங்கலாய்த் தெரிந்தது. ஒரு கணம் அதைப் பார்த்துக் கொண்டு நின்றாள். உடனே திரும்பி, படுக்கை அறைக்குப் பக்கத்திலிருந்த உடை அணியும் அறைக்குச் சென்றாள். தான் அணிந்திருந்த நகைகளைக் கழற்றி வைத்தாள். சாவடிக்குப்பத்திலிருந்து வந்தபோது அவள் அணிந்து வந்த 'கௌன்' அலமாரியில் இருந்தது. தான் போட்டுக் கொண்டிருந்த புது கௌனை எடுத்து வைத்துவிட்டு, அந்தப் பழைய கௌனைப் போட்டுக் கொண்டாள். பிறகு, சாரு மறுபடியும் சத்தப்படுத்தாமல் படுக்கையறைக்குள் வந்து, உமாராணியைச் சற்று தூரத்திலிருந்தபடியே ஆவலுடன் எட்டிப் பார்த்துவிட்டு, கதவை மெள்ளத் திறந்து கொண்டு வெளியே சென்றாள். அடுத்த இரண்டு நிமிஷத்துக்கெல்லாம் 'வஸந்த விஹார'த்தின் வாசலுக்கு வந்துவிட்டாள். அந்த அர்த்த ராத்திரியில் பால் போல் எரித்த நிலவின் பிரகாசத்தில், முன்னே டிராமா டிக்கெட் விற்பதற்காக வந்த வழியை ஞாபகப் படுத்திக் கொண்டு, குழந்தை தன்னந் தனியாகச் சாவடிக்குப்பத்தை நோக்கிச் சென்றாள்.

## 47. கண் திறந்தது!

அதே அர்த்தராத்திரிப் போதில் இன்னோர் ஆத்மா கண்விழித்துக் கொண்டிருந்தது. சம்பு சாஸ்திரி அன்றிரவு சாவடிக் குப்பத்திலிருந்து பிரயாணப்பட்டுப் போவதென்று தீர்மானித்திருந்தார். தல்லாளிடமும் மற்றவர்களிடமும் விடை பெற்றுக் கொண்டு போவதென்பது அசாத்தியமான காரியம்; இராமாயணத்தில் இராமர் தம்மைப் பின் தொடர்ந்த அயோத்திவாசிகள் தூங்கும்போது போனது போல் தாமும்

## அருள்வாக்கு



இன்றைக்கு லோக விஷயங்களைப் பத்திரிகைகளின் (ந்யூஸ் பேப்பர்களின்) மூலம் தெரிந்து கொள்கிறோம். பல தேசத்திலுள்ள ரிப்போர்ட்டர்கள், ந்யூஸ் ஏஜென்ஸிகள் எல்லோரும் கடிதம் எழுதியும் தந்தி கொடுத்தும் டெலிப்ரிண்டர் மூலம் மெஸேஜ் கொடுத்தும் இந்தச் செய்திகள் எல்லாம் கிடைக்கின்றன. லோகத்திலுள்ள இப்படிப்பட்ட கருவிகளாலும், ஸாதாரண மநுஷ்ய புத்தியாலும் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்கள் இருக்கின்றனவே! அவற்றைத் தெரிந்து கொள்ள ஒரு பத்திரிகை வேண்டாமா? எதை இந்தக் கருவிகளால் தெரிந்து கொள்ள முடியாதோ, எந்த ஊரிலிருந்து தந்தியும் டெலிப்ரிண்டரும் வராதோ, அங்கேயுள்ள விஷயங்களைச் சொல்கிற பத்திரிகைதான் வேதம். அதீந்திரிய சக்தி வாய்ந்த ரிஷிகள், அந்தப் பத்திரிகையின் வழியாகத்தான், லோகாதீதமான நம் ஸாதாரண புத்திக்கு, அதீதமான சமாசாரங்களைச் சொல்லியிருக்கிறார்கள்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அர்த்த ராத்திரியில் கிளம்பிப் போய்விட வேண்டியதுதான் என்று அவர் முடிவு செய்திருந்தார்.

சாவடிக்குப்பத்துக் குடிசையில் கடிகாரம் கிடையாது. ஆனாலும், ஏறக்குறைய நடுநிசியில் சாஸ்திரி கண் விழித்தெழுந்தார். வாசலில் போய்ப் பார்த்தார். அன்று பௌர்ணமி; சந்திரன் உச்சி வானத்தைக் கடந்து கொஞ்சம் மேற்கே சாய்ந்திருந்தது. உலகம் அப்போதுதான் பாற்கடலில் முழுகி எழுந்திருந்ததுபோல் காணப்பட்டது. தென்னை மரங்களின் மட்டைகள் இளங்காற்றில் அசைந்தபோது, முத்துச் சுடர் போன்ற நிலவின் ஒளியில் அவை பளிச் பளிச் சென்று மின்னின.

சாவடிக்குப்பத்தில் நிசப்தம் குடி கொண்டிருந்தது. ஏழை உழைப்பாளி ஜனங்கள், பகலெல்லாம் உடலை வருத்தி வேலை செய்துவிட்டு வந்தவர்கள் இரவில் அசந்து தூங்கினார்கள்.

சாஸ்திரி திரும்பவும் உள்ளே சென்றார். அம்பிகையின் முன்னால் கைகூப்பிக் கொண்டு உட்கார்ந்தார். ''தாயே! ஜகதம்பிகே! உன்னையே தஞ்சமாக அடைந்த என்னை இப்படியா கஷ்டப்படுத்துவது? எத்தனையோ துக்கங்களை நானும் பொறுத்திருக்கிறேன்; ஆனால் இந்தக் குழந்தையைப் பிரிந்த துக்கத்தைப் பொறுக்க முடியவில்லையே? ஏன் இப்படிப்பட்ட பாசத்தைக் கொடுத்தாய்? ஏன் இப்படி என்னை வருத்துகிறாய்? எதற்காக இப்படி என் இருதயத்தைப் பிழிகிறாய்?''

சாஸ்திரியின் கண்ணில் ஜலம் ததும்பிப் பிரவாகமாய் ஓடிற்று. சட்டென்று அவர் எழுந்திருந்து நின்றார்.

''அம்மா! இந்த ஏழையாலே உனக்கு ஏதோ காரியம் ஆகவேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படித் துன்புறுத்த மாட்டாய். உன் ஆக்ஞையை நான் மீறவில்லை. இதோ புறப்படுகிறேன். இந்தத் தடவை உன்னைக் கூட நான் எடுத்துப் போகவில்லை. நீ இங்கேயே இருந்து இந்த நல்ல ஜனங்களைக் காப்பாற்றிக் கொண்டிரு!''

இப்படிச் சொல்லிச் சம்பு சாஸ்திரி அம்பிகைக்கு நமஸ்காரம் செய்துவிட்டு எழுந்தார். அந்தக் குடிசையின் முன் புறத்து அறைக்குள் வந்தார். கொடியில் கிடந்த வேஷ்டி அங்கவஸ்திரங்களை எடுத்து மடிசஞ்சிக்குள் அடைக்கத் தொடங்கினார்.

அப்போது பின்னால், ''தாத்தா! தாத்தா!'' என்று குழந்தையின் குரல் கேட்டது.

சாஸ்திரிக்குத் தூக்கிவாரிப் போட்டது. திரும்பிப் பார்த்தார். அளவிலாத ஆச்சரியத்

# OWN YOUR FLAT AT MADRAS

**FLATS UNDER CONSTRUCTION**

**AKSHAYA**
16, 3rd Main Road,
Nanganallur,
Madras - 61.

**AASHIRWAD**
No. 1, 1st lane,
2nd Main Road, Trustpuram,
Kodambakkam,
Madras -24.

**AISHWARYA**
Plot 1 & 2, 7th Main Road,
Dhandeeswarar Nagar,
Velacheri,
Madras - 42.

**ADITYA**
15/4, Jayammal St., Extn.,
Aminjikarai,
Madras - 29.

- ▲ We offer deluxe flats and villas at various decent areas in Madras, suitable to your budget.
- ▲ Payment linked with the progress at site through interest free instalments or cashdown with 10% discount.
- ▲ Finance arranged from leading financial institutions.
- ▲ Aesthetically, Tastefully completed with all modern amenities.
- ▲ Quality construction and Timely possession.




## ASSOCIATED BUILDERS

2nd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017. INDIA
Ph : Off : 440224 / 440210. Res : 2345244. Fax : (044) 2344333

தினால் திக்பிரமை கொண்டார்.

''இதென்ன அதிசயம்? யார் இது? குழந்தை சாருதானா?'' என்று சொல்லி விட்டு, கண்ணைத் துடைத்துக் கொண்டு பார்த்தார்.

அப்போது சாரு, ''ஐயோ! தாத்தா! நான் கண்ட சொப்பனம் சரியாப் போயி டுத்தே! உனக்குக் கண் தெரியலையா? நான் சாருதான். என்னைத் தொட்டுப் பாரு'' என்று சொல்லித் தாத்தாவின் அருகில் வந்தாள். கீழே கிடந்த அவருடைய அங்க வஸ்திரத்தை எடுத்துக் கொடுத்து, ''இதோ உன் மேல்வேஷ்டி; தடவிப் பாரு; மேலே போட்டுக்கோ! தாத்தா! என் கையைப் பிடிக்கக்கோ! உனக்கு எங்கெல்லாம் போகணுமோ அங்கெல்லாம் நான் அழைச்கண்டு போறேன்'' என்றாள்.

சாஸ்திரி குழந்தையை அணைத்துக் கொண்டு மேலெல்லாம் தடவிக் கொடுத்து விட்டு, ''நிஜமா, என் கண்மணி சாருதான். எப்படியம்மா இந்தப் பாதி ராத்திரிலே வந்தே? தனியாவா வந்தே?'' என்றார்.

''உனக்குக் கண் பொட்டையாப் போனது என் சொப்பனத்திலே தெரிஞ்சு போச்சு. நான் இல்லாது போனா உன்னை யாரு கையைப் புடிச்சு அழைச்கண்டு போவான்னு ஓடி வந்துட்டேன்.''

''கண் பொட்டையாப் போச்சா? இதென்ன சாரு, என் கண் சரியாத்தானே இருக்கு?''

''நிஜம்மா....?''

''நிச்சயமா, சாரு!''

சாரு ஒரு கணம் யோசித்தாள். சாஸ் திரிக்கு முன்னால் மூன்று விரலைக்காட்டி, ''இது எவ்வளவு விரல், சொல்லு!'' என்று கேட்டாள்.

''மூணு விரல்!'' என்றார் சாஸ்திரி.

சாரு கையைப் பின்னால் கொண்டு போய் மறுபடியும் முன்னால் கொண்டு வந் தாள். ''இப்ப எவ்வளவு விரல்?'' என்றாள்.

''அஞ்சு விரல்'' என்றார் சாஸ்திரி.

உடனே குழந்தை, ''தாத்தாவுக்குக் கண் சரியாப் போச்சு, தாத்தாவுக்குக் கண் சரியாப் போச்சு!'' என்று கூவிக் கொண்டு சம்பு சாஸ்திரியைச் சுற்றிச் சுற்றி வந்து ஆனந்தக் கூத்தாடினாள்.

சாஸ்திரி அவளைத் தூக்கி வாரி எடுத்துக்கொண்டார்.

சாரு பொய்க் கோபத்துடன், ''போ, தாத்தா! உன்னோடே நான் 'டூ' தாத்தா! நீதான் அந்த மாயயாத்திலே என்னைக் கொண்டு போய் விட்டுட்டு, அப்புறம் வந்து பார்க்காமலேயே இருந்துட்டயே?

நான் செத்துப் போயிருந்தேன்னா, நீ என்ன பண்ணுவே?'' என்றாள்.

''அது என் பேரிலே தப்புத்தான், சாரு! அம்பாள் அந்தப் பணக்கார மாமியை அனுப்பி என்னைச் சோதனை பண்ணினாள். அது சோதனைன்னு தெரிஞ்சுக்காமே, உன்னை நான் அவள்கிட்டக் கொடுத்துட்டேன். இப்பத்தான் எனக்குக் கண் திறந்தது, சாரு!'' என்றார் சாஸ்திரி.

தமக்குக் கண் பொட்டையாய்ப் போச்சுன்னா குழந்தை சொன்னாள்? இல்லை, தமக்குக் கண் பொட்டையாய்ப் போகவில்லை; எப்போதும் பொட்டையாகவே இருந்திருக்கிறது. இப்போதுதான் உண்மையில் கண் கிடைத்தது! - இந்த மாதிரி மனத்திற்குள் நினைத்துக் கொண்ட சம்பு சாஸ்திரி, ''இனிமேல் அந்த மாதிரி தப்பு செய்யமாட்டேன், அம்மா! ஐசுவரியத்தைக் கண்டு ஏமாறமாட்டேன். நான் போகிற இடத்துக்கெல்லாம் உன்னையும் அழைச்சுண்டு போறேன். நீ வர்றயோ, இல்லையோ?'' என்றார்.

''ஓ! ரெடியா வர்றேன்'' என்று குழந்தை சொல்லித் தாத்தாவின் மடிசஞ்சியைத் தோள்மீது எடுத்து வைத்துக் கொண்டாள்.

இரண்டு பேருமாய்க் குடிசையை விட்டுக் கிளம்பினார்கள். சாவடிக்குப் பக்கத்தைத் தாண்டி மோகனமான நிலவு வெளிச்சத்தில் கொஞ்ச தூரம் நடந்து சென்றார்கள். குறுக்குப் பாதை முடிந்து பெரிய சாலையை அவர்கள் அடைந்தபோது, கொத்தவால் சாவடிக்குச் சாமான் மூட்டை கொண்டு வந்த கட்டை வண்டிகள் சில திரும்பிப் போய்க் கொண்டிருந்தன.

ஒரு வண்டிக்காரனைப் பார்த்துச் சாஸ்திரி, ''அப்பா! வண்டிகளெல்லாம் எங்கே போவுது?'' என்று கேட்டார்.

வண்டிக்காரன் தூங்கி வழிந்து கொண்டே, ''செங்கற்பட்டுக்குப் போவுதுங்க'' என்றான்.

''இந்தக் குழந்தையைக் கொஞ்சம் ஏத்தி விடட்டுமா? பொது விடிஞ்சவுடனே இறக்கிக் கொள்கிறேன்'' என்றார்.

''குழந்தையையும் ஏத்திவிடுங்க. நீங்களும் ஏறிக்கிங்க. வெறும் வண்டி தானே, சாமி?'' என்றான் வண்டிக்காரன்.

சாஸ்திரியும் சாருவும் அந்தக் கட்டை வண்டியில் ஏறிக் கொண்டார்கள். பஞ்சணை மெத்தையில் படுத்து நல்ல தூக்கம் இல்லாமல் புரண்டு கொண்டிருந்த சாரு, கட்டை வண்டியின் வைக்கோல் படுக்கையில் ஆனந்தமாகத் தூங்கினாள்.

(தொடரும்)

# ஸ்ரீராம் சிட்ஸ்

## வெற்றிக்குத் தலை வணங்குகிறது.





திருமணம், குழந்தைகள், குடும்பம் என்று அமைந்து இருபது வருடங்கள் கழிந்த பின்னர் அந்த ஆசை ஏற்பட்டது. பட்டம் பெற வேண்டும் என்கிற ஆசை. ஆசை வெட்கமறியாது என்பார்கள். ஆமாம், நான் பி.லிட். பட்ட வகுப்பில் சேரும்போது எனக்கு வயது 36.

சேர்ந்த பின்தான் அதில் உள்ள கஷ்டங்கள் தெரிந்தன. பள்ளி செல்லும் குழந்தைகள். வயது முதிர்ந்து பிறர் உதவியுடன் செயல்படும் மாமனார்-மாமியார். அவரவருக்குச் செய்ய வேண்டிய எல்லா வேலைகளையும் முடித்து விட்டு அதன் பின்னரே படிக்க நேரம். தேர்வில் 18 தாள்கள் எழுத வேண்டும். முடியுமா? முடியும் என நம்பினேன். நம்பிக்கை பொய்க்கவில்லை. எந்தக் குறையும் இன்றி முதல் வருடம் 2-ம் வகுப்பில் தேறிவிட்டேன்.

2-ம் வருடத்தில்தான் பிரச்னைகள் ஆரம்பித்தன. கணவரின் அலுவலகத்தை மூடி விட்டார்கள். வேலையில்லை. பணம் இல்லை. எனவே, புத்தகங்களை வாங்க முடியாத நிலை. என்ன செய்வது? நூலகம் துணை நின்றது. இரவல் புத்தகங்கள் இவ்வாறு 2-ம் ஆண்டுப் படிப்பை முடித்தேன்.

3-ம் ஆண்டோ, கேட்கவே வேண்டாம். தொடர்ந்து நீடித்த பொருளாதார நெருக்கடி. குழந்தைகளின் மேல் படிப்புக் கட்டணம். பெரியவர்களின் உடல் நிலைப் பாதிப்பு. அனைத்து வேதனைகளையும் மனத்திலிருந்து ஒதுக்கிப் படிப்பில் கவனம் செலுத்துவது உன்பாடு - என்பாடு ஆயிற்று.

மன உறுதியும் விடா முயற்சியும் பலனளித்தன. மூன்றாம் ஆண்டும் 2-ம் வகுப்பில் தேறினேன். அது கொண்டு வந்த மகிழ்ச்சியையே மூலதனமாகக் கொண்டு, செலவோடு செலவாக அந்த ஆண்டே முதுகலைக்கும் விண்ணப்பித்தேன்.

வளர்த்துவானேன்? முதுகலைப்பட்டமும் கிடைத்தது. என் படிப்பு இன்னும் தொடரு-கிறது. இப்போது எம்ஃபில் பட்டப் படிப்பு.

தளராத மனம், இடைவிடாத முயற்சி... இவை தான் நான் என் லட்சியங்களில் வெற்றி பெற்றதற்குக் காரணம். இது என்ன அப்படியொரு சாதனை எனச் சிலருக்குத் தோன்றக்கூடும். என்னைப் பொறுத்தவரை மலையைப் புரட்டிய எளியின்மன நிறைவு தான் ஏற்படுகிறது.

சியாமளா, எம்.ஏ., பி.லிட்.,
(எம்.ஃபில்),
சென்னை 600 005.



காவிரியைத் திறந்து விடாதது குறித்து சகட்டு மேனிக்குக் கர்நாடகாவை நாம் சபித்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் இருக்கிற தண்ணீரை வீணாக்காமல், பராமரித்து, உபயோகிப்பதில் நம்மவர்களின் கையாலாகாத்தனத்தைத்தான் முக்கொம்பு அணைப்பரப்பில் பார்க்க முடிகிறது. ஒரு காலத்தில் அமர்க்களமான சுற்றுலாத்தலம். திலத்திட்டுக்களில் பூங்கா அமைத்து, செயற்கை நீரூற்றுக்கள் நிறுவி, சிமெண்ட் பெஞ்சுகள் போட்டு, நிழல் மரங்கள் நர்த்தனமிட, ஓஹோவென இருந்திருக்க வேண்டும். அத்தனையும் பொய்யாய், பழங்கதையாய்ப் போனது குறித்து இன்று ஜோராக ஒரு இரங்கல் கூட்டம் நடத்தலாம்.

1846ல் ஆங்கிலேயர் காலத்தில் ரூ.2 லட்சம் செலவில் அணைக்கட்டு நிறுவப்பட்டதற்கான கம்பிபோட்ட கல்வெட்டு இருக்கிறது - 'எதிர்காலத் தலைமுறைகளுக்கு இதனால் கணக்கிட முடியாத பலன்கள் விளையும்' என்ற வாக்கியத்துடன். ஆனால், நாம் பார்ப்பதோ தூங்கிவழியும் பூங்கா. வருஷக் கணக்கில் சுத்தம்

● முக்கொம்பு நீர்பரப்பு...

# முக்கொம்பில்



செய்யப்படாத பாதைகள், நீர்காணாத குரோட்டன்ஸ், பாசி படிந்த ஃபவுன்டன்கள். நுழைவுக் கட்டணம் வசூலித்து, 'நுழைவுச்சீட்டு பரிசீலனைக்குட் பட்டது' என்று பெரிசாக எழுதி வைத்திருப்பதில் ஒன்றும் குறைச்ச லில்லை. அணைக்கட்டில் ஆங் காங்கே குட்டை மாதிரி நீர் தேங்கி, கொசு உற்பத்தி வார விழா கொண்டாடுவதும், குரங்குகளின் கோலோச்சலால் நீரெங்கும் மரக்கிளைகள் முறிந்து விழுந்து அழுகிக் கிடப்பதும், 'கண்டிப்பாக மீன் பிடிக்கக் கூடாது' போர்டைக் கண்டு கொள்ளாது தூண்டில், வலை, பரிசல் சகிதம் அவரவர் புகுந்து விளையாடுவதும், வெட்ட வெளியில் நிழலான சமாசாரங்கள் - நடைபெறுவதும்,



THE BODY AND APRON of this ANNICUT
for the irrigation of TANJORE
were projected by MAJOR A. T. COTTON
and constructed by MAJOR H. C. COTTON
A. D. 1836
N. W. KINDERSLEY ESQ
Principal Collector of TANJORE
THE BRIDGE AND SLUICES
were designed and built by
CAPTAIN EDWARD LAWFORD
A. D. 1846
SIR H. C. MONTGOMERY BART
Collector of TANJORE
The cost of the whole work has been
2 Lacs of Rupees
The benefits are incalculable and will
be felt by future generations

● முக்கொம்பில் கல்வெட்டு

# கல்

கரையோரா
ஆக்கிரமித்
தொட்டுச்
வென்று.

சில்லன
கான்ட்ராக்
அதன் கம்பி
டூரிஸ்ட் ப
கண்டல் வ
இருந்தாலு
கொள்கிறது



# ஒரு மூலைகல்:



# லணையில் ஒரு கம்பீரம்!

ணை ஜனதா காட்டாமணி என்ற தாவரம்
மண்டிக் கிடப்பதும்.... நெஞ்சைத்
ால்லட்டும் , சுற்றுலாத்தலம் தானா

 தேவலை. கரிகாலன் சொல்ல,
ர் கட்டிய இச் சரித்திரச் சின்னத்திற்கு
மே விஸிட்டிங் கார்டு. ஏராளமான
ளும், கார்களும், சர்பத் கடை களும்,
டிகளுமாக இயற்கைக்கு ஏரான சவால்
 கால்வைத்த தும் உற்சாகம் தொற்றிக்

சரித்திரத் தொன்மை ஏற்படுத்தும் சிலிர்ப்பும் இதற்குக் காரணம்.

எத்தனையோ சினிமாவில் காட்டி விட்டார்கள். இன்னமும் காட்டப்படாத ஏரான பிரதேசங்கள் இங்கே இன்னும் இருக்கத்தான் செய்கின்றன. பின்வருவனவற்றை நீங்கள் சினிமாவில் பார்த்திருக்கிறீர்களா?

1) அணையின் கீழே உள்ள சின்ன அனுமார் கோவில். அதன் பரணில் நடைபெறும் காதல் வைபவங்கள்.

2) தண்ணீர் திறந்துவிடப்படும் மதகுக் கதவில், தண்ணீர் வராத நேரத்தில் எந்த ஷாஜஹானோ மெனக்கெட்டு ஆணியால் செதுக்கியிருக்கும் மும்தாஜின் உருவம்.

3) கரிகாலன் சிலையின் முதுகுப் புறத்தில், பீடத்தின் கீழே, சின்னதாக ஒரு குருவிக் கூடு.

4) அணைக்கட்டின் உள்ளே, நீர்ப்பரப்பின் நடு வில் தெரியும் மணற்திட்டில் சிரிக்கும் காட்டுப் பூக்கள்.

5) சிற்றோடையாய்க் குறுகிக் கிடக்கும் நதியில் காகிதக் கப்பல் விட்டு மகிழும் 'பெரியவர்கள்!'

6) நீளமாக விரிந்து கிடக்கும் அலுமினிய பைப்களில் ஸ்ரீராமஜெயம் மாதிரி சிரத்தையோடு எழுதப் பட்டிருக்கும் ஐ லவ் யூ.

-பா.ராகவன்

வாசகர் தகவல்: சரவணபவன்
வண்ணப்படங்கள் மற்றும் சிறப்பிதழ் தொடர்பான
புகைப்படங்கள்: கோபிநாத்.



# பூ மணத்தை அமுக்கும் பணத்தின் மணம்!

'செண்பக
மல்லிகை யோடு
செங்கழு நீரிரு
வாட்சி
எண்பகர் பூவும்
கொணர்ந்தேன்
இன்றிவை
சூட்ட வா...'

என்று யசோதை கண்ணனை நீராட அழைத்தாளாம் - இது பெரியாழ்வார் பாடியது.

* கோழிக் கொண்டை

இன்று கண்ணன் கண்துயிலும் ஸ்ரீரங்கத்தில் அவர் காதில் விழக்கூடிய பூக்களின் பெயர்களே வேறு!

''கோழி, கொழுந்து, கேந்தி, மாசி பச்சை, பூண்டுத் தழை...'' - இந்தப் பெயர்கள்தான் ரங்கநாதர் கோயிலையொட்டிய சாத்தார வீதியில் ஒலித்துக் கொண்டிருந்தன.

கோழி - 'கோழிக் கொண்டை' என்ற செக்கர் செவேல் வெல்வெட் கொத்துப் பூ.

கொழுந்து - மரிக்கொழுந்து

கேந்தி - துலுக்க சாமந்தி

மாசி பச்சை, பூண்டுத் தழை - மாலை கட்டப் பயன்படும், பெயரளவில் வாசனையுடைய தழைகள்.

இவை தவிர கனகாம்பரம், அல்லி, இருவாட்சி (இது ரங்கநாதருக்கு உகந்த பூ என்கிறார்கள்) போன்றவற்றையும் அங்கங்கே பார்க்க முடிந்தது.

'மல்லிப் பூச்சந்தை மிகப் பிரசித்தி' என்றல்லவா நமக்குக் கடிதம் வந்திருந்தது...? சந்தேகத்தை நாம் வெளிப்படுத்த,

''இன்னும் சீசன் ஆரம்பிக்கலை. அதனால் அப்பப்போ பூ வரும், உடனே வித்துப் போயிடும்...''

''எங்கேயிருந்து வரும்...?''

''வயலூரைச் சுற்றியிருக்கிற கிராமங்களிலிருந்து...''

பேசிக் கொண்டிருக்கையிலேயே அந்தத் திண்ணைக் கடை கமிஷன் ஏஜென்ஸி கறுகறுப்பானது.

ஒரு சுமார் சைஸ் துணிப் பை நிறைய மல்லி அரும்புகள் திண்ணையில் கவிழ்க்கப்பட்டன. ஆண்களும் பெண்களும் முண்டியடித்துக் கொண்டு கைலி முனைகளையும் புடைவைத் தலைப்பையும் ஏந்த, ஏஜென்ஸி சிப்பந்தி, மல்லிக் குவியலில் லாகவமாய்க் கைகளை நுழைத்து 'ஒரு கை', 'இரண்டு கை' என்று தோராயமாய்ப் பிரித்துப் போட்டார்.

''என்னங்க, இந்த ஊர்ல இப்படி பூவைத் தரையில தேய்க்கறீங்க...?''

''அது தேய்க்கறதில்லீங்க - 'பூ தள்றது'. அரும்பெல்லாம் ஒண்ணும் ஆவாதுங்க.''

''மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்கு...


* குட்டை நெட்டையுடன் ரங்கராஜன்

தேங்காய் பால் எதுக்கடி....?'' என்று குதம்பைச் சித்தர் கேட்டிருக்கலாம். ஆனால், மாம்பழத்துக்குப் பெயர் போன திருவரங்கம் தாத்தாசாரி தோட்டத்தினர் நினைப்பதே வேறு.

''மாம்பழம் எங்களுக்குப் பெயரையும் புகழையும் வேண்டுமானால் சம்பாதித்துத் தரலாம். ஆனால் வருடம் பூராவும் வருமானம் வருவது தென்னையினால்தான்'' என்கிறார் ரங்கராஜன். தோட்டத்தின் சொந்தக்காரர்களுள் ஒருவர்.

இங்கு புதிதாக உருவாக்கப்பட்ட குட்டை - நெட்டை ரக மரத்தில் கைக்கெட்டும் உயரத்தில் குலைகள், அரசாங்க நர்சரிகளுக்கு நிறைய 'பிள்ளை'களை சப்ளை செய்கிறார்கள். நிறைய மரங்கள் இந்தத் தோட்டத்தில் இருப்பதால் இயற்கை முறையில் cross breeding நடந்து விடுகிறது.


* சின்னு

தென்னை வளர்க்கச் சில டிப்ஸ் தருகிறார் இங்கே நீண்ட காலமாகப் பணியில் இருக்கும் சின்னு:

''பூவைப் பையில வாங்க மாட்டீங்களா? இப்படி முந்தானையில புடிச்சுக்கிட்டு... அவஸ்தையா யில்லை...?''

''பைதான் அவஸ்தை! அதும் வாயைப் பிரிச்சுப் பூவைக் கொட்டிக்கறதுக்குள்ள கூட்டம் நம்மை பிடிச்சுக்கிட்டுப் போயிடும்...''

ஸ்ரீரங்கத்து மல்லிச் சரங்கள் சென்னைச் சரங்களைப் போலன்றி நெருக்கச் செண்டுகளாக இருந்தன. கொஞ்சம் குடைந்ததில், கட்டிய பூ விற்கும் ஒரு பெண்ணுக்கு ஒரு நாளில் ஐந்நூறு ரூபாய் வரை லாபம் வரலாம் என்று தெரிந்தது. இவர்களின் மிகப் பெரிய பிரச்னை, பிற நகரங்களில் போல் போலீஸ் தொந்தரவு.

''புதா வாளிங்க... நார் நனைக்க வச்சிருந்தேன். ஒரே அடி அடிச்சு உடைச்சுட்டாங்க...''

''நீங்க வீதியை அடைச்சுக்கிட்டுப் பூ வித்தா கோயிலுக்கு வர்றவங்களுக்குத் தொல்லை தானே...?''

''அட, கோயில் வாசல்லதானேங்க நல்லா வியாபாரம் ஆகும்...?''

- நியாயமான பேச்சு! ஒரே தீர்வு, கோயில் நிர்வாகமே பூக்கடைகளுக்கென கூடுதல் இடம் ஒதுக்குவதுதான்.





● கனகாம்பரக் கூடைகள்...

● ''ஒரே நாள்ல லட்சக்கணக்குல பூ விற்குங்க...''

மனத்தை உறுத்திய மற்றொரு விஷயம் - ஒரு புறம் மல்லி சாகுபடிக்குக் கடன் கொடுத்தும் மறுபுறம் பூ வியாபாரத்துக்குக் கடன் கொடுத்தும் விவசாயிகளையும் சிறு வியாபாரிகளையும் கமிஷன் ஏஜென்ஸிகள் வரித்துக் கொண்டிருப்பது...

சாத்தார வீதியில் பூ மணத்தைவிட வியாபார மணம்தான் தூக்கல்!

வாசகர் தகவல் : கிருஷ்ணா, கோபாலகிருஷ்ணன்

---




● நல்ல மணல் கலந்த பூமி வாகுதான் தென்னைக்கு வாய்க்கு. இறுக்கமான களிமான மண்வாகு தோதுப்படாது.

● மரத்துக்கு மரம் 15 - 18 அடி இடைவெளி அவசியம்.

● வெயில் நன்றாகப் படவேண்டும். பிற மரநிழல்கள் பிள்ளைகளை மூடக் கூடாது.

● ஒரு பிள்ளைக்கு ஒரு நாளைக்கு 15 - 20 குடம் தண்ணீர் விட வேண்டும். (சென்னைவாசிகள் பெருமூச்சு விடுவது ஸ்ரீரங்கம் வரை கேட்கிறது!)

● இயற்கை உரம் ஒவ்வொரு வருடமும் இட வேண்டும் - மரத்தைச் சுற்றி அரைவட்டமாகக் கொத்தி 60 - 75 கிலோ உரத்தை வைக்க வேண்டும். மறு வருடம், அதே மரத்தினடியில் எதிர்ப்பக்கத்தில் அரைவட்டமாகக் கொத்தி அதேபோல் உரமிட வேண்டும்.

● இப்படியெல்லாம் செய்தால் வருடத்துக்கு 200 காய் பார்க்கலாம்.

திருவரங்கத்தில் தேங்காய்கள் அபரிமிதமாய் விளைவதே பிரச்னையாக உள்ளது என்கிறார்கள். பொள்ளாச்சியும் போட்டி போட்டுக் கொண்டு விளைச்சலைப் பெருக்கிவிட்டதால் காய்களுக்குத் தமிழ்நாட்டில் நல்ல விலை கிடைப்பதில்லையாம். அரசாங்கமே ஏன் கொள்முதல் செய்யக் கூடாது என்று தேங்காய் உற்பத்தியாளர்கள் கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

இந்தோனேஷியாவில் Wet Coconut Processing என்ற முறையைப் பின்பற்றி எண்ணெய் எடுக்கிறார்களாம். கொட்டாங்கச்சி வரை வீணாகாமல் பலவித பாகங்களுக்குத் தேங்காய் முழுவதையும் உபயோகிக்கிறார்கள். திருச்சி வட்டாரத்தில் அப்படியொரு முயற்சியை மேற்கொள்ள எந்தத் தொழிலதிபராவது முன்வருவாரா...?

- எஸ். ஆர்.

வாசகர் தகவல் : கதிஜா ஹனிபா, ரா. ராகவன், சரவணபவன்.

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

**12**

*நிஜமாயிருக்கிறேன்*
*முரணானவன் என்று*
*முகம் சுழிக்கிறார்கள்.*
*- 'இனம் பிறை'*
*'மௌனக் கூடு' தொகுப்பு*

அர்ஜுனின் பெற்றோரை நான் கல்யாணத்தில் பார்த்ததுதான். முகம் கூட மறந்து போயிருந்தது. அப்பாவைக் கொண்டிருக்கிறாரா, அம்மாவையா என்று சொல்ல முடியாதபடி அர்ஜுன், மாமனார் காதும் மாமியாரின் உதடுமாகக் கலந்து கட்டியாக இருந்தார். சீட்டாடும் பழக்கம் யாரிடமிருந்து வந்தது என்று யோசித்துப் பார்த்து சிரித்துக் கொண்டேன். கேட்கவில்லை. அப்பா, வந்த கையோடு தன் ஆரோக்கியத்துக்கு உண்டான கண்டிஷன்களைச் சொல்லிவிட்டார். ''பாரு ரேகா! நான் யாருக்கும் தொந்தரவு கொடுக்க விருப்பமில்லாதவன். என் வேலைகள் எல்லாவற்றையும் நானேதான் பார்த்துக் கொள்ளப் போகிறேன். அர்ஜுன் மாதிரி நான் மகா சோம்பேறி இல்லை. காலையில் பெண்கள் எழுந்திருக்கவில்லை என்றால் நான் சொந்தமாக காப்பி போட்டுக் கொள்வேன். என்னை சகாராவில் விட்டாலும் பிழைத்துக் கொள்வேன். ஒட்டகத்தின் பால் போதும்!'' என்று சிரித்தார். அந்த சிரிப்பு நிச்சயம் அர்ஜுனை ஞாபகப்படுத்தியது. போனால் போகிறது என்று உலகத்துக்கு சலுகை கொடுப்பதுபோலச் சிரித்து விட்டு, சட்டென்று அணைக்கப்படும் சிரிப்பு.

சொன்னதுதான். ஒரு நாள் கூட காப்பி போடவில்லை. ஆனால் நடை முறையில் ஏழுவரை தூக்கம். மாமியாருக்குக் கொஞ்சம் ஆர்த்ரைட்டிஸ் உண்டாம். அதனால் காலை, குளிர் வேளையாதலால் லேட்டாகத்தான் எழுந்திருப்பாராம்.

வீட்டு வேலைகளைச் செய்வதில் எனக்கு ஏதும் தயக்கமில்லை. அம்மா நன்றாகத்தான் என்னை ட்ரெய்ன் பண்ணிவைத்திருந்தாள். அதனால் இது ஒன்றும் கஷ்டமாகத் தோன்றவில்லை.

ஆனால் நான்கு பேர் புழங்குவதற்கு அந்த ஃப்ளாட் கொஞ்சம் போதவில்லைதான். ப்ரைவஸி குறைந்துவிட்டது. எல்லா காரியங்களும் பெட்ரூம் கதவைத் தாழிட்டுக் கொண்டுத்தான் செய்ய வேண்டியிருந்தது.

''அர்ஜுன், இவர்கள் எத்தனை நாள் இருக்கப் போகிறார்கள்?'' என்று கேட்டு வைத்தேன்.

''ஏன்! பயப்படாதே! பர்மனண்டாக இருக்க மாட்டார்கள். காயத்ரி வந்து அழைத்துக் கொண்டு போவாள்'' என்று சற்றே கோபத்துடன் சொன்னார். ''சீட்டாட்டத்தைப் பற்றி அப்பாவிடம் ஏதும் ஆரம்பிக்காதே! உங்கப்பா மாதிரி இல்லை எங்கப்பா. உன்மேல் கோபித்துக் கொள்வார். என்னைக் குறை சொன்னால் அவருக்குப் பொறுக்காது''

அர்ஜுனின் அப்பா நாராயணமூர்த்தி ஏதோ உத்தியோகத்தில் இருந்தபோது ரொம்ப கெடுபிடியான ஆபிசராம். அதே கெடுபிடி வீட்டிலும் கொண்டுவர முடியாமல் நான் ஒருத்திதான் அகப்பட்டேன். உபதேசம் உபதேசம் என்று எனக்கு வாழ்வில் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று தினம் ஒரு மணிநேரம் போர் அடிப்பார். அவர் எழுதிவைத்திருந்த பழைய சுலோகங்களையெல்லாம் படித்துப் பார்க்கச் சொல்வார். அதில் கேள்விகேட்டு தர்மசங்கடப்படுத்துவார். மாமியார் என்பவருக்கு, ப்ரேமா என்று எப்படி பேர் வைத்தார்கள் என்று ஆச்சரியமே. ப்ரேமை என்பதே இல்லாமல் எப்போதும் என்னை சந்தேகக் கண்ணால் பார்த்தாலும், தொந்தரவில்லாமல் தான் இருந்தார். அவர் மனதைக் கணிப்பது கஷ்டமாக இருந்தது. வேளா வேளைக்குக் காப்பி கொடுத்து விட்டால் போதும். சோறு வேண்டாம். கணவருக்கு மோர், ஜூஸ் முதலியன கரைத்துக் கொடுப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். தினம் காலை எழுந்ததும் அபிராமி அந்தாதி. சமையல் அறை முழுக்க ஊதுபத்திப் புகை.

இவர்கள் வந்து இரண்டாவது வாரம் கொஞ்சம் சண்டை வந்தது. கீதா, என்னை ஒரு ஃபாஷன் ஷோவுக்கு அழைத்துச் செல்ல கார் கொண்டு வந்திருந்தாள். மாமியாரிடம் 'காலை சமையலை நீங்கள் பார்த்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்டபோது, எனக்கு சமையலறை பழக்கமில்லை என்று சொல்லிவிட்டார்.

''நான் எங்கேயாவது தப்பாக கேள்



## கதை

திறந்து வைத்துவிட்டு, பற்றிக் கொண்டு விட்டால்?'' என்று சொன்னார். ஹோ, ''நோ ப்ராப்ளம்! பக்கத்தில் ராமாஸ் கபேயிலிருந்து வாங்கிவந்து விடலாம்'' என்றால், மாமனார் ஓட்டலில் சாப்பிட மாட்டாராம்.

எப்படி இந்த பிரச்னையைத் தீர்த்து வைப்பது என்று தெரியாமல் ''நீபோ, ஹோ! நான் வரவில்லை'' என்று சொல்லி விட்டேன்.

எனக்காக உன் ப்ரொக்ராம கான்ஸல் பண்ண வேண்டாம்! நீ போ! ஏதாவது பழம் வாங்கி வைத்தால் போதும்'' என்றார்.

''நீங்கள் கோவையில் காயத்ரி வீட்டில் சமைக்கிறதே கிடையாதா? அங்கேயும் காஸ் பயன்படுத்தினதில்லையா?'' என்று கேட்டுவிட்டேன்.

மாமி, 'பெரியவர்களை எதிர்த்துப் பேசாதே' என்று அவர்கள் கதவை சாத்திக் கொண்டுவிட, அப்புறம் அர்ஜுனுக்கு போன் செய்து அவர் வந்து, ''என்ன இது! இத்தனை சீக்கிரமே மாமியார் மாமனாருடன் சண்டை போட ஆரம்பித்துவிட்டாய்?'' என்று கேட்டபோது எனக்கு அழுகை வந்தது. நடந்தது எல்லாவற்றையும் சொன்னபோது, அர்ஜுன் ஒரு விதமான அனுதாபமும் காட்டாமல் ''பாரு ரேகா, அவா இன்னும் இருக்கப்போறது ஒரு வாரமோ பதினைந்து நாளோ. அது வரைக்கும் சண்டைபோடாமல் இரு. இந்த போட்டி, அழகு நிலையம் எல்லாம் அவர்கள் போனதும் வைத்துக் கொள்ளலாம். அவர்கள் கொஞ்சம் பழங்காலத்து மனிதர்கள்'' என்றார். மாமியார், அதிலிருந்து என்னுடன் கொஞ்ச நஞ்சம் பேசுவதையும் நிறுத்திவிட்டார். மாமனார் சுலோகம் வாசிக்கக் கூப்பிடவில்லை.

**நா**ன் இந்த சின்ன விஷயத்துக்கெல்லாம் கோபித்துக் கொள்கிறார்களே என்று அசால்ட்டாகவே இருந்து விட்டேன். ஆனால் எத்தனை நேரம்தான் வீட்டில் உட்கார்ந்திருப்பது? எத்தனை நேரம்தான் படிப்பது என்று ஒரு நாள் ஹோவுக்கு போன் பண்ணிவிட்டு, சமையல் எல்லாம் முன்னாலேயே பண்ணி வைத்து, மாமியாரிடம் ''அம்மா நான் வெளியே போகிறேன். நீங்கள் எடுத்து போட்டுக் கொள்வீர்களா?'' என்றபோது ''எல்லாம் ஆறிப்போய் விடுமே'' என்றார்.

''ஆறிப்போனால் சுட வைத்துக் கொள்ள மாட்டீர்களா!''

''நான்தான் சொல்கிறேனே, உங்கள் வீட்டு காஸ் அடுப்பு எனக்கு சரிப்பட்டு வராது என்று''

''என்ன அடுப்பு சரிப்பட்டு வரும்?'' என்றேன். கெரொசின் அடுப்பாம்.

லஸ் கார்னருக்குப் போய் ஒரு ஸ்டவ்

வாங்கிக் கொடுத்து விட்டுத்தான் போனேன்.

கீதா என்னிடம் கேட்டாள், ''மாமியார் ரொம்ப தொந்தரவு பண்ணுறாங்களா ரேகா?''

''ஆமாம் கீதா! ஒருவழிக்கும் வராது ஏதாவது குறை சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள்.

''அர்ஜுனைக் கேட்டு விட்டேன், எத்தனை நாள் இருக்கப் போகிறதாம்?''

''கோபித்துக் கொள்வார்''

''நான் கேட்டு விடவா?''

''நான் கேட்டதாகக் கேட்காதே!''

கீதா தன் சகோதரன் சந்த்ரசேகர் என்கிற மிக்கியை அறிமுகப் படுத்திவைத்தாள். ''போன வருஷம் எனக்கும் மிக்கிக்கும் சொத்து தகராறு. அர்ஜுன்தான் தீர்த்து வைத்தார். இப்போது நாங்கள் இருவரும் சமாதானமாக இருக்கிறோம்.'' மிக்கி, கீதாவை விட இரண்டு வயசுதான் அதிகமாக இருக்கலாம். பேச்சில் கீதாவைப் போலவே வசீகரம்.

''கீதாதான் சொன்னா, அர்ஜுனின் மனைவி அத்தனை அழகு என்று. நான் நம்பவில்லை! ஆனால் இந்தமுறை உண்மை சொல்லியிருக்கிறாள்.''

இந்தப் பாராட்டை எப்படி எடுத்துக் கொள்வது என்று தெரியாமல் விழித்தேன்.

இவனை, இவள் எதற்கு அழைத்து வந்திருக்கிறாள் என்று தெரியவில்லை.

''அர்ஜுனும் நானும் ஒரு போர்ட் ஃபோலியோ கம்பெனி துவங்க உத்தேசித்திருக்கிறோம். கீதாவும் பார்ட்னர். உங்களையும் பார்ட்னராக போட்டு விடலாம். என்ன கீதா?''

கீதா சிரித்தாள். ''முதலில் அவளுக்கு போர்ட் ஃபோலியோ என்றால் என்ன என்று சொல்லிக்கொடு.''

''நான் தயார்! இத்தனை அழகான பொண்ணுக்கு எதுசொல்லிக் கொடுக்கவும் நான் தயார்'' என்றபோது கீதா என்னை அதை விகற்பமாக அர்த்தம் பண்ணிக் கொண்டு விடுவேனோ என்ற அச்சத்தில் அவசரமாகப் பார்த்து 'ஷட் அப் மிக்கி' என்றாள்.

மிக்கி எனக்காக மூன்று கலர் ஐஸ் க்ரீம் வாங்கிக் கொடுத்தது, என்னை அவ்வப்போது பார்த்து கண் சிமிட்டியது எல்லாம் பழக்கமில்லாத சுபாவங்களாக இருந்தன.

மாலை திரும்பி வந்தபோது அர்ஜுன் ஆபிசிலிருந்து வந்து ''இந்த கீதா உன்னை ஸ்பாயில் பண்ணிடுவா'' என்றார்.

''நான்தான் அவளை வரவழைத்தேன்'' என்றேன்.

''அப்பா அம்மாவை விட கீதாதான் உனக்கு முக்யமா?'' என்றார்.

''அப்படியில்லை. எல்லாம் பண்ணி வைத்து விட்டுத்தானே போனேன்?'' என்றேன்.

எதும் நன்றாக இல்லை என்று சொல்லி விட்டு அவர்கள் மூவரும் ஒரு மணி நேரம் வராந்தாவில் அவர்கள் குடும்பக் கதை பேசிக் கொண்டிருந்தபோது, என்னை ஒதுக்கி வைத்திருந்தது வருத்தமாக இருந்தது. ராத்திரி படுக்கைக்கு அவர் வந்ததும் கேட்டேன். 'அப்பா,அம்மா எத்தனைநாள் இருக்கப் போகிறார்கள்?' என்றேன்.

''ஏன்?''

''என்னை ஏறக்குறைய ஒதுக்கி வைத்து என்னோடு அவர்கள் பேசுவதே இல்லை'' என்றேன்.

''நீ தான் அவர்களோடு பேசுவதில்லையாம்'' என்றார். என்ன இது விநோதமாக இருக்கிறது! மறுநாள் மாமியார் சமையல் அறையில் குடைந்து கொண்டிருந்தார். அவரே காப்பிபோட்டு தனக்கும் மாமனாருக்கும் டிக்காஷன் போட்டுக் கொண்டார். எனக்குக் கடுப்பாக இருந்தது. அவர்களைக் கேட்கத்தான் விரும்பினேன். அர்ஜுன் சப்போர்ட் இல்லாமல் கேட்க முடியாது என்று தீர்மானித்து விட்டு, நான்



எதுவுமே நடக்கவில்லைபோல இந்த மௌனயுத்தம் எத்தனை நாள் என்று பொறுமையுடன் இருந்தேன்.

அர்ஜுனிடம் கீதா கேட்டிருக்க வேண்டும்.

ஒருநாள் சாயங்காலம் அர்ஜுன் சத்தமாகப் பேசிக்கொண்டிருந்தார். ''அப்பா நீங்க ரெண்டுபேரும் ரொம்ப நாள் இருக்கிறது அவளுக்குப் பிடிக்கவில்லை போல இருக்கு. நீங்க வேணா காயத்ரி கிட்ட போய் இருந்துட்டு கோயமுத்தூர் போறது நல்லது.''

''நான் எங்க போறதுன்னு நீ யார் சொல்றது? நான் போறேன், போகமாட்டேன். தம்பிகிட்ட போறேன்'' என்று ஏதோ பேசிக் கொண்டார்கள்.

''நல்ல குடும்பத்துப் பெண்ணா இருக்கும் என்று சம்பந்தம் பண்ணிக் கொண்டால் இந்த மாதிரி மூஞ்சியை தூக்கி வைத்துக் கொள்ளும் என்று எதிர்பார்க்கவே இல்லை.''

அம்மா இதைச் சொன்னதும்தான் கோபம் வந்தது எனக்கு. ''நான் என்ன செய்து விட்டேன்.ஒரு நாள் சமையல் பண்ணி வைத்துவிட்டு வெளியே போனது

தப்பா? எதற்காக இல்லாததையும், பொல்லாததையும் சொல்கிறீர்கள்? எதற்காக என் குடும்பத்தைப் பற்றி எல்லாம் இழுக்கிறீர்கள்?'' என்றபோது மூன்று பேரும் என்னை மிருகக் காட்சிச் சாலையில் மிருகத்தைப் பார்ப்பது போலப் பார்த்து ''பாரும்மா இது எங்க ஃபாமிலி மேட்டர். அதில் உன்னைப்பற்றிப் பேசவில்லை.''

''இந்த ஃபேமிலி என் ஃபேமிலியும் தான்!'' என்றேன்.

''அப்படி நடந்துக்கவே இல்லையே நீ. ஒதுங்கின்னா இருக்கே'' என்றார்.

''அப்படி இருக்கிறது நீங்களா, நானா என்று தனியாக யோசித்துப் பாருங்கள்.''

அர்ஜுன் இதற்காக, அதிகப்படியாக மாமனார் மாமியாரிடம் காலில் விழுந்து மன்னிப்பு கேட்கச் சொன்னார். நான் என்ன செய்ய? கொஞ்ச நேரம் ரூமில் தனியாக அழுதுவிட்டு அப்புறம் வெளியே வந்து அவர்கள் இருவருக்கும் நமஸ்காரம் பண்ணி விட்டு மன்னிப்பு கேட்டுக் கொண்டேன்.

அதன்பின் புயல் அடித்து ஓய்ந்தது என்று சொல்லலாம். கீதா இருமுறை வந்த போது நான் அவளுடன் செல்லவில்லை.

> ***"நல்ல பிரபலமான இவரு என் திடீர்னு கட்சி ஆரம்பிக்கிறார்?"***
> ***"காணாமல் போறதுக்குத்தான்."***
> ***- தி.மா. தமிழழகன்***

மிக்கி என்கிற சந்திரசேகரன் வந்த போதும் நான் பிடி கொடுத்துப் பேசவில்லை. மிக்கி ஒருமுறை போனில் பேசினான்.

''ரேகா, மிக்கி.''

''யாரு?''

''மிக்கி மிக்கி.''

''அப்படி யாரையும்....'' ''கீதாவின் பிரதர்!'' ''சாரி, மறந்துட்டேன்!''

''எப்படி இருக்கீங்க? வீட்டை விட்டு வெளியே வரமாட்டிங்களா!''

''மதர் இன்லா, ஃபாதர் இன்லா.''

''புரியுது, புரியுது! இது எல்லார் வீட்லயும் உள்ளது. கீதா சொன்னா. நாளைக்கு நீங்க ஃப்ரியா?''

''நான் எப்பவுமே ஃப்ரீதான்.''

''லஞ்சுக்கு வருவீர்களா? உங்க கூட ஸ்டாக் விஷயமா பேசணும். கீதாவும் வருவா''

''அர்ஜுனைக் கேட்டுக்கறேன்.''

''அர்ஜுனை நான் கேட்டாச்சு. அவன் ஓகேன்னிட்டான்.''

''எதற்கும் நானும் கேட்டுக்கறேன்.''

''நீங்க கேட்க வேண்டாம்'' என்றான். எனக்கு விநோதமாக இருந்தது.

மறுநாள் தயாராக மத்யான வேளையில் வந்தபோது, மாமியார் ''ரேகா உன்னைப் பார்க்க வந்திருக்கிறான் - யாரோ சந்திரசேகராம்'' என்றார்.

நான் போனை எடுத்து அர்ஜுனுக்கு, மாமியார் முன்னாலேயே பேசினேன். ''நான்தான் ரேகா பேசறேன். நீங்க சந்திரசேகரை வரச் சொன்னீங்களா?''

''எதற்கு?''

''ஏதோ ஸ்டாக் விஷயமா....''

''ஓ அதானா! ஸ்டாக்ஸ் பத்தி உனக்கு விளக்கமா சொல்றதுக்கு நான் சொல்லியிருந்தேன். அங்க இருக்கானா?''

போனை சந்திரசேகர் வாங்கிக் கொள்ள, ''ஹாய் அர்ஜுன், மிக்கி! நீ ஒரு முறை சொன்னியே ...''

மறுபடி போன் என்னிடம் கொடுக்கப் பட்டபோது ''ரேகா அவன் கூட நீ ஆபீசுக்கு வந்துடு. இங்கிருந்து லஞ்சுக்கு போகலாம்''

''எதுக்கும் உங்க அம்மா கிட்ட சொல்லிருங்க! அப்புறம் நானா அவங்களை அலட்சியம் பண்ணிவிட்டு புறப்பட்டு வந்ததா நினைத்துக் கொள்ளப் போகிறார்கள்!''

''தேவையில்லை. நான் சொல்லிக்கிறேன்!''

நான், அந்த வீடு ஒரு சிறைபோல இருந்ததால்தான் மிக்கி மாதிரி ஒரு ஆசாமியுடன் அர்ஜுனின் ஆபீசுக்குச் செல்ல சம்மதித்தேனென்று சொல்ல வேண்டும். காரணம், அந்த மிக்கி என்கிறவன் மிகவும் மரியாதையாக இருந்தவன், காரில் உட்காரும் போது என் தோளில் தொட்டான். ஏதோ அகஸ் மாத்தாக நிகழ்கிறது என்று நான் நினைத் திருக்க, கார் கதவைச் சாத்தும் போது ஸ்பஷ்டமாக என்மேல் இடித்தான்.

அடிக்கடி பின் கண்ணாடி வழியாக என்னைப் பார்த்தான். அந்த செண்ட் வாசனை எனக்குப் பிடிக்கவில்லை. இதெல்லாம் சகஜம் போல நடந்து கொண்டான்.

''எப்படி இருக்கிறது கல்யாண வாழ்க்கை?''

''ஓகே!''

''ஆர் யூ நாட் ஹாப்பி?''

''எஸ்!''

''மதர் இன்லா ப்ராப்ளமா?''

''அப்படி இல்லை! அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்வது கஷ்டமாக இருக்கிறது. சரியாய்ப் போய்விடும்.''

கீதா சொன்னாள். ரேகா, லைஃப்ல எதையும் சகஜமா எடுத்துக்கணும்... ஃப்ரெண்ட்ஷிப், லவ், செக்ஸ் எதையும்.''

''சிவப்பு எரியுது!'' என்றேன். வெளியே ட்ராஃபிக் விளக்கைப் பார்த்து.

(தொடரும்)

பயனில்லாத
ஒன்றைக் கொடுத்து
விரும்பிப்
பயன்படுத்தக் கூடிய
பொருளைப் பெற்றுச்
செல்லுங்கள்.



புதிய ஜைமோ விலையில் ரூ. 1/- தள்ளுபடி

வழக்கமாக டிடர்ஜெண்ட் வில்லை
உறையைத் துக்கி எறிந்துவிடுவீர்கள்.
வேண்டாம். அதைக் கொடுத்து,
அதற்கு பதிலாகப் புதிய,
மேம்படுத்தப்பட்ட ஜைமோ வாங்கி
(125 கிராம் வில்லை மட்டுமே) அதன்
விலையில் ரூ. 1/- தள்ளுபடி * பெறுங்கள்.
ஜெர்மன் ஃபார்முலா கொண்ட
இந்த டிடர்ஜெண்ட் வில்லை
இப்போது முன்னைவிட அதிக
சிறப்பானது. பயன்படுத்திப்
பாருங்கள். அதன் பிறகு, வேறு
டிடர்ஜெண்ட் வில்லையைப்
பயன்படுத்தும் எண்ணத்தையே
தூக்கி எறிந்து விடுவீர்கள் !




* ஓர் உறைக்கு ஒரு ஜைமோ வில்லை மட்டுமே.
இச்சலுகை தமிழ்நாடு, கேரளம் மற்றும் கர்நாடகத்தில் மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் ஜைமோ கிடைக்கும்.

Mudra : SFC :5978:94/Tam




sfc
SPIC Fine Chemicals Ltd.

# வேதம் என்றும் புதுசு! ஆர்வம் இன்று பழசு!

திருவானைக்கோவில் சங்கர மடத்திற்கு இரண்டு சிறப்புக்கள். ஒன்று — இதனைத் தோற்றுவித்தது, அமரராகிவிட்ட பரமாச்சாரியார். இரண்டு - ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் படித்த இடம் இது.

ஏராளமான சம்ஸ்கிருதப் பண்டிதர்களை உருவாக்கிய பெருமைமிக்க இம்மடம், இன்றும் வேத பாட வகுப்புகள் நடத்தி வருகிறது. இது வியப்பில்லை. ஆனால், இன்றும் வேதம் படிக்கப் பையன்கள் வருவது தான் வியப்பு.

மடத்தோடு நெடுநாள் தொடர்புடைய ஓய். வெங்கடேச தீட்சிதர் நம்மிடம் சொன்னார் : ''அந்தக் காலத்தில் வேதம் படிப்பதென்பது மிகவும் கௌரவமான விஷயம். பெற்றோர்கள், தாங்களாகவே தங்கள் பிள்ளைகளை வேதம் படிக்கக் கொண்டுவந்து விடுவர். வேதம் படித்தவர்களுக்கு அன்று வாழ்க்கையும் சுபிட்சமாகவே இருந்தது. சொல்லிக் கொடுப்பவர்களும் சந்தோஷமாகச் சொல்லிக் கொடுப்பார்கள். பிள்ளைகளும் பயபக்தியோடு கற்றுக்கொள்வார்கள்.

''ஆனால் இன்று அப்படியில்லை. பையன்களைத் தேட வேண்டியதாக இருக்கிறது. மூன்று வேளை சாதம் போட்டு, இருக்க இடமும், துணிமணிகளும், இதர வசதிகளும் செய்து கொடுத்தாலும் 'வருவேனா?' என்கிறார்கள். மிகப் பெரும் கலாசார மாற்றம் இன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆங்கிலக் கல்வி, தொழிற்கல்வி தவறில்லை. அதேசமயம், நமது சிறப்புகளுக்கெல்லாம் மூல காரணமாகிய வேதத்தை நாம் காப்பாற்ற வேண்டாமா? கிராப் வைத்துக் கொள், கைலி கூட கட்டிக் கொள் - வேதம் படிக்க வா என்றால் கூட வரமாட்டேனென்கிறார்கள்.

''கொஞ்ச நாள் முன்பு இங்கு ஒரு பையன் படித்துக் கொண்டிருந்தான். திடீரென்று ஒருநாள் அவனைக் காணவில்லை. தேடிப் பார்த்ததில், ஓர் ஓட்டலில் சர்வராக வேலை பார்த்துக் கொண்டிருந்தான்!''

திருவானைக்கோவில் மடத்தில் சுமார் பத்து பையன்

# ஆண்டாள் புராணம்

ஆண்டாளைத் தெரியுமா உங்களுக்கு? சூடிக் கொடுத்த சுடர்க் கொடி இல்லை. 'தம்பிக்கு எந்த ஊரு' படத்தில் நடித்த ஆண்டாள். அற்புதமான நடிகை . இப்போது நடிப்பதில்லை. ஆவலிருந்தால் ஸ்ரீரங்கம் கோவிலில் எப்போதும் பார்க்கலாம். ஒரு விஷயம். புடவை கட்டி, பொட்டு வைத்து, மேக்கப்போடு ஒரு நங்கையைத் தேடினால் ஏமாறுவீர்கள். ஆண்டாள் — யானை!

தன் பாகன் - இல்லை - அப்பா ஸ்ரீதருடன் எப்போதும் கோவிலுக்குள்ளே நின்று, வருபவரை வரவேற்று ஆசி வழங்கும் ஆண்டாளுக்கென்று இப்பகுதியில் ஒரு ரசிகர் பட்டாளமே உண்டு. மன்றம் வைக்காத குறை!



தமிழ், கன்னடம், மலையாளம் என்று மூன்று மொழிகள் அறிந்த ஆண்டாள், நவராத்திரி சமயத்தில் தாயார் சந்நிதியில் மண்டியிட்டு, தொண்டி யடித்து, சாமரம் விசி, 'ரங்கா, ரங்கா' என்று கூப்பிடும் அழகைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் திரளாகக் கூடுவர்.

* ஸ்ரீதருடன் ஆண்டாள்



● வேதம் படிக்கும் மாணவர்கள்...

கள் இன்றுவேதம் படித்துக் கொண்டிருக்கிறார்கள். விசாரித்ததில் - அநேகமாக அந்தணர் பெரும் ஏழ்மை நிலையிலிருப்பவர்கள். சாப்பாட்டுப் பிரச்னை தீர இங்கு வேதம் பயில வந்திருப்பவர்கள்.



மடத்தில் உபாத்தியாயராக இருக்கும் முத்து கிருஷ்ண சாஸ்திரிகள் சொன்னார் : ''என்ன செய்வது? வேதம் படித்தவனுக்குச் சாதம் போட யார் இருக்கிறார்கள்? காலம் குட்டிச்சுவராகிக் கொண்டிருக்கிறது. புரோகிதம் பண்ணிப் பிழைப்பதுதான் வேத பாட மாணவர்களுக்கு ஒரே வழியாக இருக்கிறது. அதனால்தான் நாங்களும் வேத மந்திரங்களுடன் கல்யாணம், காரியம் போன்றவைகளுக்கான மந்திரங்களும் சொல்லிக் கொடுத்து வருகிறோம். அவர்களும் பிழைக்க வேண்டாமா?''

வருத்தமாயிருக்கிறது. வேதனையாயிருக்கிறது. மனம் கனக்கிறது. விடைபெற்று, வெளியே வந்து வெகுநேரம் கழித்தும் மனத்தை என்னமோ நிமிண்டிக் கொண்டேயிருக்கிறது...

- கிச்சா

வாசகர் தகவல் : ஜானகி மணாளன், என். பாஸ்கர்

---

ஆண்டாளின் தந்தையை ஜி.பி.எஸ். என்பார்கள். காட்டில், 45க்கும் மேற்பட்ட யானைகளை அடக்கி, தன் கட்டுக்குள் வைத்திருந்ததாம் அது! ஆனால் , ஆண்டாள் வெகு சாது! பழக்கமானவர்கள் பெயர் சொல்லிக் கூப்பிட்டால் திரும்பிப் பார்க்கும். தெரியாதவர்களென்றால் கண்டு கொள்வதில்லை! தலையைக் குனிந்து கொண்டுவிடுவாள். என்ன இருந்தாலும் பெண் அல்லவா? அதுவும் 'ஸ்வீட் சிக்ஸ்டீன்' வேறு!

திருவரங்கன் கோவிலில் ஆண்டாளின் பாதுகாவலனாகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீதருக்கு, ஆண்டாள்தான் உறவு; ஆண்டாள்தான் நட்பு; ஆண்டாள்தான் உலகம்; ஆண்டாள்தான் எல்லாம்! தன்மீது ஆண்டாள் தவிர வேறு யாரும் உரிமை கொண்டாடக் கூடாதென்பதால் ஸ்ரீதர், திருமணம் கூடச் செய்து கொள்ளவில்லை!

யானைக் கொட்டகையிலேயே ஒருபுறம் சமையல், ஒருபுறம் படுக்கை, ஒருபுறம் அருமை மகள் ஆண்டாள் என்று ஹாயாக இருக்கிறார் ஸ்ரீதர்.

''ஆண்டாளுக்கு, கல்யாணம் பண்ண வேண்டும். அவளுக்கு ஒரு குழந்தை பிறக்க வேண்டும்'' என்று ஒரு பெற்றோரின் பொறுப்புடன் கூறுகிறார் ஸ்ரீதர்!

அப்புறம் ஒரு விஷயம். ஆண்டாளுக்கு ஸ்ட்ராங் காப்பி என்றால் உயிர்! ஊரில் சில பெண்கள், ஆண்டாளுக்குக் காப்பி கொடுப்பதைத் தமது அன்றாடக் கடமையாகவே வைத்துக் கொண்டிருக்கின்றனர்! ஒரு பெண்மணி, பிரசவ வலி எடுத்து, மருத்துவமனைக்குக் கிளம்புகிற நேரத்திலும் ஆண்டாளுக்குக் காப்பி போட்டு கூஜாவில் கொடுத்தனுப்பி விட்டுத்தான் வண்டி ஏறினாராம்! பெருமையாகச் சொல்கிறார் ஸ்ரீதர்.

- மைதிலி சேஷாத்ரி

ஓம் என்று சொல்லுவோம்!

# அரங்கனின் துயில்; அகிலாண்டேஸ்வரியின் தவம்; அம்மனின் புன்னகை!

எந்தக் கோவிலுக்கும் ஒரு குறிப்பிட்ட தொடக்ககால வரலாறு சொல்வார்கள். 'கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் சமரசேகர அமர பாண்டியன் கட்டினான்' என்று புரியாத கல்வெட்டைக் காட்டி விடுவார்கள். நாமும் வாயைப் பிளந்து மூணு ரூபாய் தட்சணை வைத்துவருவோம். ஸ்ரீரங்கத்தில் அப்படியில்லை. தமிழகத்தில் இருக்கிற அத்தனை கோவில்களை விடவும் பழமை வாய்ந்தது இதுவாகத்தான் இருக்க வேண்டும் என்கிறார்கள்.

இது யுகங்கள் கடந்த சமாசாரம். ராமாயண காலத்துக் கோவில் என்கிறார்கள். விபீஷணனோடு சம்பந்தப்படுத்தி கதை சொல்கிறார்கள். ராமர் பூஜித்த பெருமாள் என்கிறார்கள். மூலவரை ஒருதரம் ஊன்றிப் பார்த்தால் அவசியம் நம்பி விடலாம். யுகங்கள் கடந்த பழமையைச் சொல்லும் அந்தக் கலை வடிவத்தை எழுத்தில் கொண்டு வர நினைப்பதைவிட அபத்தம் வேறில்லை. ஆழ்ந்த நித்திரையா? கனவுப் பிரதேச உலாவலா? ஜஸ்ட் - ஒரு சின்ன ரிலாக்ஸேஷன் தானா? களைப்பா? சோர்வா? அல்லது வெறும் போஸா? நின்று, ஆழ்ந்து நோக்கி, ரசிப்பதற்குள் தமிழில் ஜூரகண்டி.

● ஸ்ரீரங்கநாதர் (உற்சவர் - வண்ணப்படம்: ஏ. எம். ஆர். கண்ணன்)



ஸ்ரீரங்கத்தின் சரித்திரத்தில் எப்படி ஆழ்வார்களும், அன்றைய தமிழ் மன்னர்களும், நேற்றைய கோபுர ஜீயரும் தவிர்க்க முடியாதவர்களோ - அதே மாதிரிதான் முஸ்லிம் மன்னர்களும். இரண்டு முறை இங்கே நிகழ்ந்திருக்கும் கொள்ளை நோக்கிலான முஸ்லிம் படையெடுப்புகளுக்கு. சரித்திரப் புத்தகங்களைத் தவிர கலாசார ரீதியிலான ஆதாரங்கள் இன்று ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. தளபதி உலூக்கான் படையெடுப்பால் தகர்க்கப்பட்டதாகச் சொல்லப்படுகிற விண்ணளாவிய மதில்சுவர்கள் யாவும் செவ்வனே எழுப்பப்பட்டிருக்கின்றன. (அவற்றை 'லட்சத்தில் ஒருவன் ரஜினிகாந்த் நற்பணி மன்றத்தின'ரும், 'இந்தியாவின் ஜீனியஸ் கமல்ஹாசன்' ரசிகர்களும் இன்று ஆக்கிரமித்துக் கொண்டிருப்பது வேறு சங்கதி.)

வராக வம்சங்களும், வற்றாத ஜீவ சாக்கடைகளும், தூண்களில் துலங்

கும் புளியோதரைக் கறைகளும், மண்டபங்களைப் பெரும்பாலும் மறைத்து நிற்கும் வளையல், ரிப்பன், ஃபோட்டோ, பீப்பீ கடைகளும் ஒரு பொருட்டில்லையென்றால் சேர, சோழ, பாண்டிய, பல்லவ, நாயக்க வம்சத்தவரின் கலைப் பரிசுகளை வெகு ரசிக்கலாம். கோவிலுக்குள்ளேயே சின்னதாக ஒரு ம்யூஸியம் வைத்திருக்கிறார்கள்.

என்ட்ரன்ஸ் எட்டணாவுக்குப் பால் மாறாமல் உள்ளே போய்ப் பார்த்தால் - கால இயந்திரத்தில் ஏறிச் சில பல நூற்றாண்டுகள் பின்னே போய் விட்ட உணர்வு தவிர்க்க முடியாது வரும். மன்னர்கள் பயன்படுத்திய வாள், கேடயம் (ஆமை ஓட்டில் ஒரு கேடயம்!), கத்தி, யானைத் தந்தங்கள், பெருமாள் அமுது செய்த பாத்திரம், ஓலைச் சுவடிகள், பழங்கால வாத்தியங்கள், சேர, சோழர்கால நாணயங்கள் என்று அருமையான சேகரம். "எதையும் தொடாதீர்!" என்ற எச்சரிக்கையை யார் கேட்கிறார்கள்? கண்காணிப்பாளர் தினத்தந்தியில் கன்னித்தீவு படித்துக் கொண்டிருக்கிறார்.

கலைமணிராஜன்

ஸ்ரீரங்கத்தின் பரபரப்பாலும், சந்தடியாலும், களேபரத்தாலும் துளியும் பாதிக்கப்படாது, ஒருவித மோனத் தவத்தில் இயங்குவது போல நிசப்த சாகரமாய்த் தெரிகிறது திருவானைக்கோவில். இத்தனைக்கும் ஸ்ரீரங்கத்திலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவுதான். லிங்கத்தைச் சுற்றி எப்போதும் நீர், யானை - சிலந்தி மோட்சம், அகிலாண்டேஸ்வரியின் தவம் எல்லாம் தெரிந்த கதைதான். ஆனால், இக்கோவிலுக்கு உள்ளே நுழைந்துவிட்டால், வெளியே வர மனமில்லாது போவதற்கு முக்கியக் காரணம் - இங்கே உள்ள பராமரிப்பு. வியப்பு, வியப்பு, மேலும் வியப்பு!

நடக்க, நடக்கக் கூடவே வரும் மதில்களில் ஒரு செ. மீ. பாக்கி இல்லை. குட்டிகுட்டியாக, கெட்டி கெட்டியாகச் சிற்ப சாகஸங்கள். மூலை, முடுக்குகளிலெல்லாம் புகுந்து விளையாடிருக்கிறார்கள். ஏராளக் கதைகளை இப்படிச் சிற்ப வடிவில் சொல்லுவது தவிர, ஆங்காங்கே அநேக கல்வெட்டுகள், மன்னர்கள் அளித்த மானிய விவரங்கள். (இதன் மேலெல்லாம் அபத்தமாகச் கண்



● சமயபுரம் : தேரில் தாயவி...

ணாம்பு பூசியிருப்பவர்களைத்தான் மன்னிக்க முடியவில்லை.)

துடைத்து விட்டாற்போல் பொலியும் பிராகாரங்களும், ஏராளமான சிற்பங்களின் அணிவகுப்பும், உற்சவமூர்த்திகளின் எழிலும், அகிலாண்டேஸ்வரியின் கலப தரிசனமும் - ஏன் மக்கள் இங்கே அதிகம் வருவது இல்லை?

கி. மு. 600 இல் கோச்செங்கணான் என்கிற சோழனால் நிர்மாணிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது இக்கோவில். சில வரலாற்று வல்லுனர்கள் இவனது காலத்தையே கி. மு. 100 என்றும் அல்லது கி. பி. 100 என்றும் கருத்து வேறுபடுகிறார்கள். அது ஏதாயினும் இருக்கக் கடவது. மேற்படி

* கல்லிலே கலைவண்ணம்....



சோழனால்தான் இக்கோவிலின் கோபுரங்களும் முதல் பிராகார மதிலும் எழுப்பப் பட்டது என்பதை இதுவரை யாரும் மறுக்கவில்லை. வேறுசில சோழர்களும் இங்கே தம் கைவரிசையைக் காட்டியிருக்கிறார்கள். குலசேகரப் பாண்டியனும் வரகுண பாண்டியனும் சில மண்டபங்களை நிர்மாணித்திருப்பதாகத் தகவல்கள் உள்ளன.

கிழக்கிந்தியக் கம்பெனி, 1752 இல் பிரெஞ்சுப் படையுடன் மோதிய சமயத்தில், இரண்டு நாட்கள், பிரெஞ்சுப் படைக்கு இக்கோவில் அடைக்கலம் தந்திருக்கிறது. போரில் பிரெஞ்சுப் படை தோற்றபின், அதன் தளபதி கோவிலில் வந்து தங்கி, அதைப் பற்றி ஒரு நூலே எழுதியிருக்கிறார். இன்றும் இதன் கைப்பிரதி பாரீஸ் நூல் நிலையத்தில் காணக் கிடைக்கிறது.

இந்த இதழில் நீங்கள் வேறு எங்கு தேடினாலும் சமயபுரம் பற்றி ஒரு செய்தியும் கிடைக்காது. சமயபுரத்தில் கோவில் தவிர, வேறு விசேஷமில்லை என்று அந்த ஊர்க்காரர்களே முடிவு செய்துவிட்டார்கள் போலும்.

பர்மா பஜார், ரங்கநாதன் தெரு, கொத்தவால் சாவடி, பொள்ளாச்சி சந்தை மாதிரி சமயபுரம் ஒரு பயங்கரமான நெரிசல் சாம்ராஜ்ஜியமாகி விட்டிருக்கிறது. அம்மனின் பூர்வ சரித்திரம், ஊரின் பழம் பெருமை, மன்னர்கள் சம்பந்தம் பற்றியெல்லாம் கோவிலுக்குள்ளிருந்து சற்றும் யோசித்துக் கொண்டிருக்க இயலாது. திருப்பதி கெட்டது. அத்தனை கும்பல். வழியோரக் கடைகளும், எல் ஆர். ஈஸ்வரி பாட்டுகளும், அங்கப் பிரதட்சிணமும், ஆங்காங்கே மூன்று கல் வைத்து அடுப்பு மூட்டிப் பொங்கலிடும் கும்பலும், வயிற்றின்மேல் மாவிளக்கும், சந்நிதியில் துளிர் விடும் வியர்வையும்... அம்பா





ஸ்ரீரங்கத்தில், ரங்கநாதர் கோவில் தவிர பிறிதொரு பழமை வாய்ந்த கோவில் இருக்கிறது. இது, ரங்கநாதர் கோவிலுக்கும் சீனியர். ஆனால், சொல்லப் படுவது, ரங்கநாதர் கோவிலின் உபகோவிலாக. பெயர் : காட்டழகிய சிங்கர் ஆலயம். மகாலக்ஷ்மியை மடியில் ஏந்தி, புன்னகை பூக்கும் முகத்துடன் அமர்ந்து காட்சிதரும் நரசிம்மர், விபீஷணனால் வழிபடப்பட்டவர் என்கிறார்கள். சுவர்கள் காரை பெயர்ந்து, தூண்கள் அழுக்கேறி, வெளிப்புறம் மிருந்த இடிபாடுகளுடன் இருந்தாலும் சுற்றுப்புறத்தின் எழில், இவையெல்லா வற்றையும் மறக் கடித்துவிடுகிறது. இருப்பினும், ரங்கனின் பக்தர்கள் இந்த சிங்கரையும் கொஞ்சம் கவனிக்கலாம். சமீப காலமாக, கோவில் பராமரிப்பில் அதிக கவனம் காட்டும் நமது முதல்வரின் கருணாகடாட்சம், இந்தக் கோவிலின் பால் கொஞ்சம் விழுந்தால் வெகு உபகாரமாயிருக்கும்.



● காட்டழகிய சிங்கர்
(படம் : ஜி. எல். நரசிம்மன்)

● சோலை சூழலில்...

திருவானைக்கோவிலில், உச்சி காலப் பூஜையின் போது அர்ச்சகர், பெண் போலப் புடவையணிந்து பூஜிக்கிறார். இந்த வழக்கம் வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. இதன் அர்த்தம்: அம்பாளே, தினமும் இறைவனைப் பூஜிக்கிறாள் என்பதுதான். அம்பாளாக அர்ச்சகர் உருமாறுவதன் அடையாளம்தான் இந்தப் புடவை!

- தாயு. செந்தில்குமார்

னுக்கே சோர்வு வாராதோ என்று சந்தேகம் வருகிறது.

முன்னாளில் இது கண்ணனூர். இப்போதுதான் சமயபுரம். சோழர் காலக் கோட்டையாக இருந்த இப்பிரதேசம் பின்னாளில் விஜயநகர, நாயக்க மன்னர்களாலும் கவனிக்கப்பட்ட இடம். இன்று யாருக்கும் கவனிக்க நேரமும் இல்லை. வழியும் இல்லை. ஏராள பக்தர் பெருக்கத்தால் 'அழுக்கு', கோவிலின் நிரந்தரச் சின்னமாக இருக்கிறது. ஆடு, கோழி நேர்த்திக் கடனுக்கு கௌண்ட்டர் வைத்திருக்கிறார்கள். நெரிசலின் இடையே ஒருதரமாவது அம்பாள் கண்ணில் படுவாளா என்று ஏங்கும் முகங்கள். மொட்டைத் தலைகளில் சந்தனப் பூச்சு. தமிழ், தெலுங்கு, மலையாளம் என்று காதுகளில் மொழிச் சங்கமம்.

ரோஸ் நிற அம்பாள் முகத்தில் சின்னதாக, மிகச் சின்னதாக ஒரு புன்னகைக் கீற்று. யாராவது சொல்லுங்கள். அதற்கு என்ன அர்த்தம்?

● திருவானைக்கோவில் தேரின் நுணுக்கமான மரச் சிற்பங்கள்....





நீங்கள் நினைத்துப் பார்க்க முடியாத
வகையில்,
கலையழகுடன்,
கருத்துச் செறிவுடன்,
பொழுதுபோக்கு
அம்சங்களுடன்....

**கல்கி**

*17-4-94 இதழ்*
விடுமுறைச் சிறப்பிதழாக
வெளிவருகிறது!



வண்ணப்படம் : கோபிநாத்

பெண்ணீஸ்வரா குமார் எழுதும்

# நரகமான நகரம்

அதிக, அதிக பக்கங்கள்;
அதே, அதே விலை!

புதிய மர்மத் தொடர் ஆரம்பம்!

# ஒழிக, தமிழ்த் திணிப்பு!



### முதல் நாள்

**வ**ணக்கம். தமிழகத்தில் ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரமடைந்துள்ளது. ஹிந்தியைத் திணிக்கும் முயற்சியில் மத்திய அரசு ஈடுபட்டிருப்பதாக அரசியல் கட்சிகள் குற்றம் சாட்டியுள்ளன. இதையொட்டி, இன்று நடத்தப்பட்ட போராட்டத்தின் விளைவாக, பஸ் ரயில்கள் ஓடவில்லை. மாநிலத்தில் சகஜ வாழ்வு பாதித்தது.

### இரண்டாம் நாள்

**வ**ணக்கம். 'தமிழக மக்கள் தாங்களாக விரும்பி ஏற்கும் வரை ஹிந்தி அவர்கள் மீது திணிக்கப்பட மாட்டாது. ஆனால், மற்ற மாநிலங்களைப் பின் பற்றி, தமிழக மக்களும் தாங்களே விரும்பி ஹிந்தியை ஏற்கும் நாள் விரைவில் வரும்' என்று பிரதமர் நம்பிக்கை தெரிவித்துள்ளார்.

### மூன்றாம் நாள்

**வ**ங்கம். 'செத்தெமில் தேரம்' திகல்ச்சிக்கு உங்களை அலைப்பது கல்சனா தேவி. தீங்கோ இங்கி ஒரு எக்ஸலெண்ட் ப்ரோக்ராமைப் பாக் போறீங்கோ! தமில் நாட்லே ஹிந்தி திணப்பு கூடாதுன்னு அரசில் கட்சிங்கோ போர்ட்டம் நடத்தராங்கோ. ஹிந்தி எல்த்துங்கோ மேலே தார்லே அட்ச்சக்குராங்கோ. ப்ரஷ்னாலே பெயிண்ட்லே பூஸ்கிராங்கோ. அத் பத்தி ப்ரைம் மினிஸ்டர் என் சொல்றார்? பாக்லாமா?

(பிரதமர் ஹிந்தியை யார் மீதும் திணிக்கும் எண்ணம் நிச்சயமாக இல்லை என்று உறுதி கூறுகிறார்.)

... இப்போ ப்ரைம் மினிஸ்டர் இங்லீஷ்லோ சொன்னதே நான் தமில்லே முழி பேர்த்துச் சொல்றேன். ஆர் மேல்யும் ஹிந்தி திணக்க மாட்டம். அந்தக் கர்த்து கிட்டயவே கிட்யாதுன்னு பிரதமர் சொல்ட்டார். அவர் இன்னும் என் சொல்றார்னு பாக்லாமா?

(நேருவின் உறுதிமொழி நிறைவேற்றப்படும் என்கிறார் பிரதமர்.)

இங்லீஷ் தெர்யாதவங்கோ வஸ்திக்காக, மர்ப்படியும் முழி பேர்க்கறேன். நேரு குட்த்த உர்தி மொலியை நிர்வேத்வோம்னு சொல்றார். நேரு என்ன உர்தி மொலி கொட்த்தாரு? எல்லோ கொட்த்தாரு? ஆர் கிட்டே கொட்த்தாரு? அந்த ஆள் அதை வாங்கி எங்கே வெச்சிக்காரு? அத் பத்தி நாமோ அட்த்த வாரம் பாக்லாம். நென்றி. வண்கம்!

### நான்காம் நாள்

**த**மிழகத்தில் அரசியல் கட்சியினர் நடத்தி வந்த ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் திடீரென விலக்கிக் கொள்ளப்பட்டு விட்டது. 'ஹிந்தியை மட்டுமல்ல, எந்த மொழியை வேண்டுமானாலும், எங்கள் மீது திணித்து விட்டுப் போங்கள். எல்லாவற்றையும் நாங்கள் சகித்துக் கொள்கிறோம். ஆனால், டெலிவிஷன் மூலமாக நீங்கள் திணித்து வரும் தமிழை மட்டும் எங்களால் சகித்துக் கொள்ள முடியாது. தயவு செய்து அந்தத் தமிழ் திணிப்பைக் கை விடுங்கள்' என்று தமிழகத்தின் சர்வ கட்சிகளும் மத்திய அரசுக்குக் கோரிக்கை விடுத்துத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளன.

கற்பனை : **சத்யா**




## 73. கட்டுண்டான்

தேவர்களுக்குச் சமான வாலிப வீரனான அக்ஷன், எட்டுக் குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஏறிப் போவதை வால்மீகி முனிவர் வெகு அழகாகச் சித்திரிக்கிறார். ராமாயணத்தில் காடுகளின் அழகையும், வீரர்கள் யுத்தம் செய்யும் அற்புதச் செயல்களையும், போரின் வேகத்தையும் முனிவர் சித்திரித்திருப்பதை நான் மொழி பெயர்த்துக் காட்ட இயலாது. காடு மிக அழகாக இருந்தது அல்லது யுத்தம் மிகக் கோரமாக நடந்தது என்று இவ்வளவுதான் சொல்ல முடியும். முனிவருடைய சித்திரமோ, பொருள்களின் அழகுக்குத் தகுந்த சுந்தர தொனி கொண்ட மொழிகளும், யுத்தத்தைத் தொனித்துக் காட்டும் கம்பீர ஒலி நிறைந்த மொழித் தொடர்களும், காட்டைப் போலவே யுத்தத்தைப் போலவே ஒன்றின் மேல் ஒன்றாகக் குவித்து குவிந்து, மனத்தைக் கொள்ளை கொண்டு போகும் நடை. யுத்தங்களில் இரு தரத்தாருடைய செயல்களையும் அற்புத கம்பீரத்துடன் வர்ணிப்பது வால்மீகி முனிவருடைய தனிச் சக்தி. ராவணனுடைய அருமைக் குமாரன் அக்ஷனுக்கும் ஹனுமானுக்கும் நடந்த யுத்தத்தைச் சொல்லும் விஸ்தார வர்ணனையை நான் தமிழ்ப்படுத்திச் சொல்லப் போவது முடியாத காரியம்.

தவத்தால் பெற்ற தங்கமய ரதத்தில் ராவண குமாரன் ஏறிச் சென்றான். கல் தோரணத்தின் மேல் பயமின்றிக் கம்பீரமாக உட்கார்ந்திருந்த ஹனுமானைக் கண்டான். காலாக்கினி போல் சுடர் விட்டு எரிந்து நின்ற அந்த உருவத்தைக் கண்ட அக்ஷனுடைய உள்ளத்தில் 'இவன் எனக்குத் தகுந்த பகைவன்' என்ற எண்ணம் உண்டாகி, அவன் தன் வீரத்தைப் பெருக்கிக் கொண்டான்.

இளம் வீரன் மூன்று கூரிய பாணங்களை எய்தான். அவை ஹனுமானுடைய உடலில் பட்டு ரத்தம் பெருகிற்று. ரத்தம் பெருகப் பெருக மாருதியின் வீரம் வளர்ந்தது. முகத்தின் பொலிவு கொழுந்து விட்டு எரிந்தது. வாலிப அரக்கனுடைய வீரத்தைக் கண்டு ஹனுமானும் மிக மகிழ்ச்சியடைந்தான்.

போர் முற்றி இருவருக்குமிடையில் கடும் யுத்தம் நடந்தது. அம்புக் கூட்டம் மேகங்கள் போல் ஆகாயத்தில் கிளம்பி மாருதியை மூடின. மலைமேல் மாரி பெய்வது போல அம்பு மழை ஹனுமானுடைய கல் போன்ற தேகத்தின் பேரில் பொழிந்தது. ஆகாயத்தில் கிளம்பி ஹனுமான் அற்புத முறையில் பாணங்களுக்கிடையில் சஞ்சரித்து அக்ஷனைத் தாக்கினான். வானத்தில் மேகங்களைக் காற்றானது சிதறியடிப்பது போல் அம்புக் கூட்டங்களை மாருதி லட்சியம் செய்யாமல் தன் அற்புத சஞ்சாரங்களால் சிதற அடித்தான். ராக்ஷச குமாரனுடைய சாமர்த்தியம், வீரம், பொறுமை சாவதானம் இவற்றைப்

பார்த்து "ஐயோ, இவனைக் கொல்ல வேண்டுமே!" என்று துயரப்பட்டு ஹனுமான் வெகு நேரம் யுத்தத்தை நீடித்து நடத்தினான். அரக்கனுடைய பலம் பெருகிக் கொண்டே போயிற்று. முடிவில் ஹனுமான் மனத்தை உறுதி செய்து கொண்டு அரக்கனை வதம் செய்யத் தீர்மானித்தான்.

முதலில் அக்ஷனுடைய தேரை ஒடித்துத் தீர்க்க வேண்டும் என்று ஹனுமான் நிச்சயித்து, அதன்மேல் திடீர் என்று முழு வேகத்துடன் பாய்ந்தான். தேர் பொடியாகி விழுந்தது. ஏர்க்கால் முறிந்து, கூடுகவிழ்ந்து, நாசமாகிக் குதிரைகள் மாண்டு, தேரின்றித் தரையில் நின்றான் அரக்க ராஜகுமாரன்.

இதன் பின்னும் அவன் தயங்காமல் வில்லும் கத்தியுமாக ஆகாயத்தில் கிளம்பினான். கிளம்பி மாருதியைத் தாக்கினான். இருவருக்கும் பெரும் போர் ஆகாயத்தில் நடந்தது. முடிவில் அக்ஷன் எலும்பெல்லாம் ஒடிந்து, நசுக்கப் பட்டுக் கீழே விழுந்து மாண்டான்.

ராக்ஷச குமாரன் வானரத்தால் கொல்லப்பட்டான் என்று ராவணன் அறிந்து, அவன் இதயம் துடித்தது. கிளம்பிய ரோஷத்தை அடக்கித் தன் உள்ளத்தை ஒரு நிலையில் வைத்துக் கொண்டு இந்திரனுக்குச் சமான வீரனான தன் மகன் இந்திரஜித்தை அழைத்தான்.

"எல்லா அஸ்திரங்களையும் நன்றாகப் பயின்று அடைந்திருக்கிறாய். தேவாசுரர்களை யுத்தத்தில் வென்றிருக்கிறாய். பிதாமகனைப் பூஜித்து அவரிடமிருந்து பிரும்மாஸ்திரம் பெற்றிருக்கிறாய். உன்னை எதிர்த்து நிற்கக் கூடியவர்கள் உலகத்தில் யாருமில்லை. சோர்வு என்பதை அறியாதவன் நீ. அறிவில் சிறந்தவன் நீ. தவத்தால் சக்தியடைந்திருக்கிறாய். நீ செய்ய முடியாதது ஒன்றில்லை. காரியங்களைச் சரியாக யோசித்துச் செய்வதில் உனக்கு நிகர் யாருமில்லை.
நான் .அனுப்பிய



# ஸ்ரீரங்கத்தில் வாசகர் வட்டம்...

ஸ்ரீரங்கம்-திருவானைக் கோவில்-சமயபுர வாசகர்களே!

உங்கள் ஊர்ச்சிறப்பிதழ் தயாரிக்கத் தகவல்கள் அளித்து ஒத்துழைத் தமைக்கு முதல் நன்றி.

27.3.94 அன்று ஸ்ரீரங்கா மெட்ரிகுலேஷன் மேநிலைப் பள்ளி, ராகவேந் திராபுரம், ஸ்ரீரங்கத்தில் மாலை சரியாக 4 மணிக்கு வாசகர் வட்ட விழா நடை பெறவுள்ளது. நண்பர்கள், குடும்பத்தினர் புடை சூழ நீங்கள் வந்து கலந்து கொள்ள வேண்டுகிறோம்!

சில போட்டிகளும் பரிசுகளும் உங்களுக்காக அங்கே காத்திருக்கின்றன!

- ஆசிரியர்.

கின்னரர்கள், ஜம்புமாலி, நம்முடைய மந்திரிகளின் வீரபுத்திரர்கள், சேனாதி பதிகள் ஐவர், உன் தம்பி அருமை அக்ஷன்- இவ்வளவு பேர்களும் மாண் டார்கள். நீ தான் இந்தச் சத்துருவை வென்று சிறைப்படுத்தும் வல்லமை கொண்டவன் . சேனா பலத்தால் இவனை வெல்ல முடியாது. கிட்ட நெருங்கிக் கைகலந்து யுத்தம் செய் வதும் இவனிடம் செல்லாது. நன்றாய் யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய்து, நீ இவனை எதிர்த்து வெற்றி யுடன் திரும்பி வா. தவத்தால் நீ பெற்றிருக்கும் அஸ்திரமே இந்தச் சமயத்தில் பயன்படும். உன் புத்தியைச் சிதற விடாமல் யுத்தம் செய். வெற்றி யுடன் திரும்பி வருவாய்'' என்றான்.

தந்தையின் சொல்லை ஏற்றுக் கொண்டு தேவப் பிரபாவம் பெற்ற இந்திரஜித், தந்தையை வலம் செய்து வணங்கி ஆசிபெற்றுக் கொண்டு தைரி யமாகவும் உற்சாகமாகவும் அசோக வனத்தை நோக்கிச் சென்றான்.

கோரப் பற்கள் விளங்கும் நான்கு சிம்மங்கள் பூட்டிய தேரில் ஏறி நின்று வில்லின் நாணை இழுத்து சப்தம் செய்து கொண்டு ஹனுமான் இருந்த இடம் சென்றான். பருவகால ஓசை செய் தது அவன் தேர். தாமரை இலையைப் போன்ற அவனுடைய அகன்ற கண் களில் வெற்றி எழில் திகழ்ந்தது.

ராக்ஷசேந்திர குமாரனுடைய தேர், தான் இருக்குமிடத்தை நோக்கி வேக மாக வருவதைப் பார்த்த ஹனுமான் பெரு மகிழ்ச்சியடைந்தான். யுத்தத்தில் நிபுணனான இந்திரஜித்தும் ஹனு மானை உத்தேசித்து வில்லை வளைத் துக் கூர்மையான பாணங்களையும் ஆயத்தமாக வைத்துக் கொண்டான்.

பெரும் யுத்தம் நடக்குமென்று அறிந்து நாக, யக்ஷ, சித்தர்கள் ஆகாயத் தில் வந்து சேர்ந்தார்கள்.

இந்திரஜித்தைக் கண்டதும் ஹனு மான் கர்ஜனை செய்து தன் பெரும் சரீரத்தை இன்னும் பெருக்கிக் கொண் டான். ராக்ஷச வீரன் பேசாமல் அம்பு களைத் தொடுத்து எய்தான். தேவாசுர யுத்தத்தைப் போல் அம்புமாரி பொழிய ஆரம்பித்தது.

ஹனுமான் ஆகாயத்தில் கிளம்பி அற்புத வேகத்துடன் சஞ்சரித்து மின்ன லைப் போல் வந்த கூரிய அம்புகளை வீணாக்கினான். அரக்கனுடைய பட் டத்திலிருந்து கிளம்பிய பேரிகை நாணோசை முதலிய கோஷங்களுக்குச் சமமாக வானர வீரன் தன் கர்ஜனைக ளால் திக்குகள் எதிரொலிக்கச் செய் தான். இப்படி இரு வீரர்களிடையே நடந்த யுத்தம் பார்த்தவர்கள் பிரமிக்கும் வகையில் வளர்ந்து கொண்டே போயிற்று. இருவருடைய சாமர்த்திய மும் சமமாகவே இருந்தது.

எத்தனை பாணங்கள் பட்டும் ஹனுமானுடைய சக்தி குறைய வில்லை. அதைப் பார்த்து, 'இந்த வானரம் என் அம்புகளால் தோல்வி யடையப் போவதில்லை. என் பாணங் கள் இவனைக் காயப்படுத்துவதாகக் காணவில்லை. தந்தை சொன்னது உண்மை. பிரம்மாஸ்திரம் பிரயோ கித்தே இவனைக் கட்டிவிட வேண்டி யது' என்று ராக்ஷசன் தீர்மானித்தான்.

ராக்ஷச குமாரன் பிரம்மாஸ்திரத்தை எய்தான். அது வானர / வீரனைத் தாக்கியதும் அவன் கட்டுண்டு செய லற்றுப் போனான்.

(தொடரும்)

ஸ்ரீரங்கத்து மண்ணுக்கு, எழுத்தாளர்களை உருவாக்குவதில் அலாதி ஆசை. அந்நாளைய ஸ்ரீரங்கம் நரசிம்மன், நேற்றைய சுஜாதா, வாலி... என ஏராளர் இந்த பூமியில் விளைந்தவர்கள். இன்றைய இளந்தலைமுறை எழுத்தாளர்களான கிருஷ்ணா, ரிஷபன், விஜயநிலா, சத்யா ஸ்ரீனிவாசன், தமிழினியன் (கல்கியில் அடிக்கடி இவர்களைப் பார்க்கலாம்.) யாவரும் ஸ்ரீரங்கம், திருவானைக்கா, சுற்றுவட்டார எழுத்தாளர்கள் தாம். சிறப்பிதழுக்காக, இத்தனை பேரின் கதைகளைப் போடுவதை விட, அத்தனை பேரையும் ஒரே கதையை எழுதச் சொன்னால் என்ன என்று தோன்றியது. திருவானைக்கா கோவில் மண்டபத்துக்கு கி,ரி,வி,ச,த - ஐவரையும் வரவழைத்து, டைட்டிலையும் நாமே கொடுத்து, சீட்டு குலுக்கிப் போட்டு சத்யா ஸ்ரீனிவாசன் ஆரம்பிக்க, மற்ற நால்வரையும் 'Relay' ஸ்டைலில் தொடரச் சொன்னோம். யாரும் முன்னதாகக் கதையைப் பேசி வைத்துக் கொள்ளாமல், திடீர் என ஆரம்பித்து, இரண்டு மணி நேரத்தில் எழுதி முடிக்கப்பட்ட சிறுகதை இது!

**சத்யாஸ்ரீனிவாசன்
ஆரம்பிக்கிறார்**

மணி ஆறு. ராஜகோபுர வாசலில் தவிப்புடன் நின்றிருந்தாள் நித்யா. அதி காலை வியாபாரங்கள் மும்முரமாய் ஆரம்ப மாகியிருந்தன. சாத்தாரத் தெருவுக்குப் போகும் பூ வண்டிகள் மணியடித்தபடி கடந்து கொண்டிருந்தன. லேசான குளிர் இருந்தும் நித்யாவுக்கு வியர்த்தது. ரவி ஏன் இன்னும் வரவில்லை?

''ஆறு மணிக்கெல்லாம் நான் வந்துட றேன். உடனே பஸ் பிடிச்சி திருச்சி போயிட லாம். அங்க, என் ஃப்ரெண்ட்ஸ், ரூம்ல வெயிட் பண்ணிட்டிருப்பாங்க. டிபன் முடிச்சிட்டு ரிஜிஸ்டர் ஆபீஸ் போறோம். பத்து மணிக்கு முகூர்த்தம். அங்க நம்ம கல் யாணத்தை முடிச்சிட்டு, திரும்பி வரோம். நேரா கோவில். அப்புறம் என்வீடு. உன் வீடு. அப்பா, அம்மாட்ட ஆசீர்வாதம் கேப் போம். தந்தா சரி. இல்லையா, சாயங் காலமே தனிக்குடித்தனம் ஆரம்பிச்சிட வேண்டியதுதான். என் ஃப்ரெண்ட் பிர காஷ், மேலச்சித்திர வீதில வீடு பார்த்திருக் கான், எதுக்கும் இருக்கட்டும்னு. மாசம் முன்னூறு வாடகை. மூணு மாசம் அட் வான்ஸ்....''

ஏன் இன்னும் வரவில்லை? அவன் கொஞ்சம் பயந்த பேர்வழிதான். இருந்தா லும் அத்தனை நம்பிக்கையாகச் சொன் னானே? நூறாவது முறையாக, கோபுரத்தை அண்ணாந்து பார்த்துக் கன்னத்தில் போட் டுக் கொண்டாள் நித்யா.

நிமிஷத்துக்கொருதரம் திருச்சிக்குப் போகிற பஸ்கள் பேரிரைச்சலோடு கிளம் பிக் கொண்டிருந்தன. ரவியைக் காண வில்லை.

லேசாகக் கண்கள் பனித்தன நித்யா



# கோபுரவாசல்

வுக்கு. ''ரவி, வந்துடு. ப்ளீஸ், வந்துடு. இன்னும் கொஞ்ச நேரத்துல என் வீட்டிலிருந்து ஆள் வந்துடும். அதுக்குள்ள நீ வந்துடேன், ப்ளீஸ்...''

சட்டென்று வந்து நின்ற சிவப்பு நிற மாருதியைப் பார்த்ததும் நித்யா பிரகாசமானாள். இது ரவி வீட்டுக் கார்! வேகமாக அருகே போனவள், கார் திறந்து இறங்குபவரைப் பார்த்து அதிர்ந்தாள்.

அது -

ரவியின் அப்பா ராமலிங்கம்!



## தமிழ்மகன் தொடர்கிறார்

''நீங்களா?'' திகைத்தாள் நித்யா.

''ஆமாம்மா. நாந்தான்.. ரவியின் அப்பா...'' சொல்லும் போதே குரல் தழுதழுத்தது.

''இருபத்தஞ்சு வருஷமா, பிள்ளையைப் பெற்று, வளர்த்து, படிக்க வெச்சி, ஆளாக்கி... எங்கள் குடும்ப கௌரவத்தைக் காப்பாத்துவான்னு எதிர்பார்த்த அப்பாவித் தந்தைம்மா நான்... கலபமா ஓடிப் போகப் பார்த்தீங்களே?''



''எப்படி வந்தீங்க? யார் சொன்னது? ரவி எங்கே?''

''பேசாமல் வீட்டுக்குப் போம்மா. இதெல்லாம் வேண்டாம். தப்பு.''

''ரவி எங்கே? இப்ப நான் அவரைப் பார்க்கணும்!''

''முடியாதும்மா. அவனை இப்ப பார்க்க முடியாது!''

''ஏன் முடியாது? என் ரவியை நீங்க என்ன பண்ணீங்க? ஹவுஸ் அரஸ்ட் பண்ணிட்டீங்களா? இல்லை, கொன்னுட்டீங்களா?''

''அப்படி ஆகியிருந்தாக் கூட நான் கவலைப்பட மாட்டேம்மா. ஆனா... அவன்....''



''என்னாச்சு? ரவிக்கு என்னாச்சு?''

''நேத்து ராத்திரி ஏழு மணி இருக்கும். எங்கோ டென்ஷனா கிளம்பிட்டிருந்தான். வாசலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. பார்த்தால், கார் இல்லை. ஜீப்... போலீஸ் ஜீப்! மளமளன்னு நாலைந்து போலீஸ்காரங்க இறங்கினாங்க. ரவியை இழுத்துக்கிட்டுப் போயிட்டாங்கம்மா...''

குலுங்கிக் குலுங்கி அழுதார். நித்யா அதிர்ந்தாள். ''ஏன்? எதுக்கு?''

''அவன் வேலை பார்க்கிற பாங்க்ல ஏதோ திருட்டு நடந்துடுச்சாம். அதுல அவன் இன்வால்வ் ஆகியிருக்கானாம்... போலீஸ் ஸ்டேஷன்ல தான் அவன், நீ இங்க இருப்பேன்னு சொல்லி, உன்னை வீட்டுக்கு அனுப்பி வைக்குமாறு சொன்னான்.... நான் வரேம்மா... என் போதாத காலம்...''

ராமலிங்கம் புறப்பட்டார்.



## தொடர்பவர் விஜயநிலா

'நோ. இவர் பொய் சொல்கிறார். நித்யா, நீ இதை நம்பாதே. உன் ரவி அப்படிப்பட்டவன் இல்லை. நம்பாதே! நம்பாதே!'

'நோ. நான் நம்பப் போவதில்லை' - நித்யா ராமலிங்கத்தைக் கூப்பிட்டு நிறுத்தினாள். அவர், ''நீ நம்பவில்லைதானே? ரவி இப்போது இல்லை. அவன் லாக்கப்பில் இருக்கிறான். வா, நீயும் வா!''

''ஸார், ரவியா இப்படிச் செய்திருப்பார்?''

''என்னாலயும் நம்பத்தான் முடியலை. இட் மஸ்ட் பி ஸம் கான்ஸ்பிரஸி.''

''சரி, வாங்க சார். பார்த்துடலாம்!!''



தில்லை நகரில் இருந்தது அந்த வீடு. இல்லை மினியேச்சர் அரண்மனை. உள்ளேயிருந்து வெளிப்பட்ட மனிதர் குள்ளமாக இருந்தார். அருகே வந்து, ''வா ராமலிங்கம்! இவள்தான் அந்தப் பெண்ணா?'' என்றார்.

நித்யா, அவரை எப்படி மதிக்கலாம் என்று யோசித்தாள். அவளுக்குள் இன்னொரு நித்யா, 'நம்பாதே, இவர்கள் சொல்வது எல்லாம் பொய்!'' என்றாள்.

''நித்யா, இவன் என்னோட ஃப்ரெண்ட். அட்வகேட் ஜெயசங்கரன்.''

''ஓகே. லெட்ஸ் கோ. ரவியை உடனே ஜாமின்ல எடுக்கணும். அவன் அந்தத் தப்பு பண்ணியிருக்கமாட்டான்!'' என்றார் ஜெயசங்கரன்.

ஒரு வேளை... ரவி அந்தத் தப்பைச் செய்திருப்பானோ... அன்று கூட உச்சிப் பிள்ளையாரைப் பார்க்கப் போனபோது, தான் வழியில் ஒரு கடையில் நீல நிற ப்ரூச்சை ஆசையாகப் பார்த்தபோது, 'கட்டு'க் கொண்டு வந்து விடட்டுமா என்று கேட்டானே....?

'ரவி.... நம் காதல் சத்தியமாய் எந்த வம்புக்கும் போகக் கூடாது என்று உன்னை என் மடியில் சாய்த்துக் கொண்டு அதே மலையடிவாரத்தில் சொன்னதெல்லாம் பொய்யாகப் போகிறதா?'

ஸ்டேஷனில் நுழைந்ததும் ஜெயசங்கரன், அங்கிருந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டரை அழைத்தார். ராமலிங்கம் தவிப்பாய் உணர்ந்தார். நித்யா மெல்லத் தலையை நிமிர்த்திப் பார்த்த போது -

அதிர்ந்து போய் நின்றுவிட்டாள்.

கம்பிகளுக்குப் பின்னால்.... அது? அது? என் ரவியா? இல்லை... இல்லை....

**ரிஷபன் தொடர்கிறார்**

''நித்யா....!''

குரல் ஈனமாய் வெளிப்பட்டது. காதருகே எத்தனை முறை கிசுகிசுத்து, அதிர்வை உண்டாக்கிய இன்பமான குரல்!

''ரவி.... நீங்களா?''

நம்பத்தான் முடியவில்லை. முகமெல்லாம் வீங்கி, தலை மயிர் கலைந்து, கால்கள் தடுமாறி, இவனா... இதென்ன தேர்ட் டிகிரி சித்ரவதையா? சினிமாக்களில் சாயம் கொட்டிய கதாநாயகர்களிடம் வராத அதிர்ச்சி, இன்று நிஜமாய்... நேருக்கு நேர்....

நித்யா கேவினாள். ராமலிங்கம் அதற்குள் கதாரித்து விட்டிருந்தார். ஜெயசங்கரன் தனது மிடுக்கைப் பிரயோகித்ததில், அரை மணியில் ரவி, மாருதியில் மீண்டும் பயணம். அருகே நித்யா.

அழுதாள். எப்போதும் சிரிக்கிறவள்.

''ரவி... நீங்க நிச்சயம் செஞ்சிருக்க மாட்டீங்க. உங்களுக்கு அவ்வளவு துணிச்சல் இல்லை....''

ரவியின் முகம் வேதனையையும் மீறி, பார்வையில் காதல் மின்னியது.

''நிஜம்தான் நித்யா. கேஷ்ல நானும் இன்னொருத்தரும் டியூட்டி. அது ஏதோ ஃபோர்ஜரி பண்ணின செக்காம். ஆனா சந்தேகிக்க முடியாதபடி அவ்வளவு பக்காவா இருந்தது. ஹெட் கேஷியர்கிட்ட பணம் கலெக்ட் பண்ண நான் போவேன், செக் அமௌவுண்ட் அதிகங்கறதால. இன்ஃபேக்ட் அந்தச் செக்க டீல் பண்ணது பக்கத்து சீட்காரர்தான். என்னையே தனக்கும் அமௌண்ட் டிரா பண்ணிக்கிட்டு வரச் சொன்னாரு. நான் பணம் எடுத்துக்கிட்டு வந்ததாலே, நானும், இதுல சம்பந்தப் பட்டிருக்கிறதா நெனச்சி....''

ரவி விம்மினான். பக்கத்தில் ராமலிங்கம் இருப்பதை அலட்சியம் செய்தவனாய் நித்யாவை இறுக்கிக் கொண்டான்.

ஜெயசங்கரன் கனைத்துக் கொண்டார்..

''உங்கக் காதலை விட இப்ப ரவியோட பிரச்னை ரொம்ப சீரியஸ். எப்படியாவது அவனை ரிலீஸ் பண்ணி ஆகணும். அதுக்கு என்ன செய்யறது?''

**கிருஷ்ணா முடிக்கிறார்**

கேட்டாரே தவிர ஜெயசங்கரன் சாதித்துக் காட்டி விட்டார். நாற்பது வருட வக்கீல் உத்யோகத்தில் எத்தனை கேஸ்கள் பார்த்திருப்பார்? அவரது தலையில் ஒவ்வொரு நரையும் ஒவ்வொரு வெற்றியின்



சின்னம் போலும்! கருப்புக் கோட்டை இழுத்து விட்ட படி ரவி நிரபராதி என்று தீர்ப்புப் படித்து, ஜட்ஜ் உள்ளே போய், ஒரு தம்ளர் தண்ணீர் குடித்த வேளையில், நித்யா கோர்ட் என்றும் பாராமல் ரவியை நெருங்கி, அணைத்துக் கொண்டாள். ஜெயசங்கரன் இம்முறை கனைத்துக் கொள்ளவில்லை. ராமலிங்கம் மட்டும் கண்ணை மூடிக் கொண்டார்.

தொடர்ந்து வந்த நாட்களில் ஒரு கபயோக கபடினைத் தில் மஞ்சள்-ரோஸ் பத்திரிகை அச்சடித்து, ரவி-நித்யா திருமணம் மேளச் சப்தத்துக்கு இடையில் நடந்து முடிந்தது.

முதலிரவு. பட்டுப் புடவையும் வெட்கமும் சரசரக்க நித்யா, ரவியின் அருகில் வந்து அமர்ந்தாள்.

''சினிமா மாதிரி ஆயிடிச்சில்ல நம்ம கல்யாணம்? எப்படியோ கிளைமேக்ஸுக்கு வந்துட்டோம்.''

ரவி சிரித்தான்.

''சினிமாதான். இல்லைன்னா ஒரு சபலத்துல தப்புப் பண்ணி, மாட்டிக்கிட்டு ஜெயசங்கரன் சாரோட சாமர்த்தியத்தால இப்படி தப்பிக்க வந்திருக்க முடியுமா?''

நித்யா அதிர்ந்தாள்.

''ரவி, நீ என்ன சொல்ற?''

''நிஜம்தான் நித்யா. ஒரு வேளை நம்ம கல்யாணத்தை வீட்ல ஒத்துக்காட்டா, நாம தனியா வாழறதுக்குப் பணம் வேண்டாமா? வசம்மா ஒரு பார்ட்டி மாட்டிச்சி. ஃபோர்ஜரி செக். பாஸ் பண்ணிக் குடுத்தா பத்து பர்செண்ட் கமிஷன் தரதா சொன்னாங்க. கமிஷன் தொகையே ஒரு லட்சம்னா பார்த்துக்கோ.''

''ரவி, நீங்க நிஜமாத்தான் சொல்றீங்களா? ஆஃப்டர்ஆல் பணத்துக்காக இப்படி கேவலமான ஒரு காரியத்தைச் செய்ய எப்படி ரவி மனசு வந்தது? சே! நீயெல்லாம் ஒரு மனுஷனா. உன்னைப் போயா நான் லவ் பண்ணினேன்? பழையதோ, கஞ்சியோ - நிஜம்மா உழைச்சுச் சாப்பிடறதுல இருக்கிற சந்தோஷம் தெரியுமா உங்களுக்கு? இப்படி திருட்டு வழியில வந்தப் பணத்தை நான் ஏத்துப்பேன்னு எப்படி முடிவு பண்ணீங்க ரவி? எரியற நெருப்பு மாதிரி நம்ம காதல், அத்தனை சுத்தமா இருக்கணும்னு நான் நெனச்சேன். சாம்பலாக்கிட்டீங்களே, ரவி.''

''புரியாம பேசாத நித்யா!''

''புரிஞ்சித்தான் பேசறேன். நான் விரும்பினது, பால் மாதிரி பரிசுத்தமான ரவியைத்தான். திரிஞ்ச போன பாலையில்லை. சட்டத்துல இருந்து நீங்க தப்பிச்சிருக்கலாம்! குற்றவாளியில்லைன்னு வெளியுலகத்துக்கு நிரூபிச்சிருக்கலாம். ஆனா இத்தனைக்கு அப்புறமும் நான் உங்களை ஏத்துப்பேன்னு மட்டும் நெனைக்காதீங்க ரவி.''

''நித்யா... யூ ஆர் ஆல்ரெடி மை ஒய்ஃப்!''

''தாலி ஏறிடுச்சு, உண்மைதான்; ஆனா தமிழ்ப் பண்பாடு, அது இதுன்னு சொல்லி உன்னோட நான் வாழ்வேன்னு மட்டும் கனவு காணாத ரவி. விவாகரத்துக்கு வக்கீல் நோட்டீஸ் கூடிய சீக்கிரத்தில் வரும். நான் வரேன் - ஸாரி - போறேன். உனக்கு குட்பை சொல்லக் கூட வெக்கமாயிருக்கு!''

திரும்பிப் பார்க்காமல் வெளியே போகிற நித்யாவை அதிர்ந்துபோய் பார்த்துக் கொண்டு நின்றான் ரவி.

*(டைட்டிலுக்கும் கதைக்கும் ஏதாவது சம்பந்தம் இருப்பதாகத் தோன்றினால் வாசகர்கள் எழுதி அனுப்பலாம்.)*



* ''யாருக்குக் கிடைக்கும் இந்த பாக்கியம்!''

# புள்ளிகள் உருவாக்கும் செய்திகள்

## நாணய மனோகரன்

தன் சம்பாத்தியத்தில் முதல் செலவு நாணயச் சேகரிப்புக்குத்தான் என்பதில் விடாப்பிடியாக இருக்கிறார் மனோகரன். ஸ்ரீரங்கம் ரயில்வே ஸ்டேஷனில் உதவி ஸ்டேஷன் மாஸ்டர். (அனுசரித்துப் போகும் மனைவி வாய்த்தாரோ, தப்பித்தார்!)

தமது அப்பாவைப் பார்த்துதான் இவருக்கும் நாணயச் சேகரிப்பில் ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது. பழையபாத்திரக்காரர்கள்தான் இந்தவகையில் இவருக்குப் பெரும் உதவி! காலம் காலமாக வீடுகளில் இருந்துவரும் உலோக நாணயங்களை, அம்மணியர் எவர்சில்வர் பாத்திரங்களாக மாற்றத் துடிக்கும் போதெல்லாம் மனோகரன், பாத்திரக்கடைகளை முற்றுகையிட்டு அவற்றை வாங்கிக் கொண்டு வருகிறார்.

''தஞ்சாவூரிலிருந்து சீர்காழிவரை எங்கு தோண்டினாலும், எந்தப் பழங்கால வீடுகளின் சுவர்கள் இடியும் போதும் ராஜ ராஜ சோழன் கால நாணயங்கள் கிடைக்கின்றன'' என்கிறார் மனோகரன். ஆற்றுப் படுகைகளிலும் வயல்வெளிகளிலும் அவ்வப்போது கிடைக்கும் இம்மாதிரி நாணயங்களை நியாயமாக, மக்கள் அரசுக்குச் சேர்த்துவிட வேண்டும். ஆனால் எங்கே மேலும் அவர்கள் குடைந்து தோண்டி, பிறிதொரு மொஹஞ்சதாரோவாக்கி, தங்கள் நிலம் கைவிட்டுப் போய்விடுமோ என்கிற அச்சத்தில் அவர்கள் அரசுக்கோ, அகழ்வாராய்ச்சிப் பிரிவுக்கோ தகவல் தருவ இல்லை. எடைக்குப் போட்டு விடுகிறார்கள். மனோகரன் அங்கங்கே சொல்லி வைத்து இவற்றைச் சேகரிக்கிறார். சேர, சோழ, பாண்டியர் கால நாணயங்கள், அகஸ்டஸ்சீஸர் கால நாணயங்கள், இந்தோ-ரோமன் நாணயம், டைபீரியஸ்-நீரூரோ நாணயம் என்று ஏராள கலெக்ஷன் இவரிடம்.

மனோகரன் தனக்குக் கிடைத்த நாணயங்களை ஆராய்கிறார். அவற்றில் உள்ள முத்திரைகள், எழுத்து வடிவங்களை அறிந்து கொள்வதன் மூலம், பண்டைய

சரித்திர வெற்றிச் சம்பவங்கள் நமக்குப் புரிகின்றன என்கிறார். இதற்காக அந்தக் கால எழுத்துமுறைகளை வேறு, தனியே பயில்கிறார் இவர்!

ராஜேந்திர சோழன் காலத்து ஒரு தங்க நாணயத்தை எப்படியாவது பெற்றுவிட, மாயவரத்தில் ஒரு பாத்திரக் கடைக்குக் கிட்டத்தட்ட ஆறுமாதங்கள் வாரம் தோறும் அலைந்ததைப் புன்முறுவலோடு தெரிவிக்கிறார் மனோகரன்!

## வாரியாருக்கு வாரிசு

**வா**ரியாருக்கு வாரிசா? நமக்கு வந்த தகவலைப் பார்த்ததும் வியப்பாயிருந்தது. திருவானைக்கோவில் ரவியை வாரியாரே 'தம் வாரிசு' என்று வெண்பா வடிவில் எழுதித் தந்திருந்த ஜெராக்ஸ் பிரதிதான் நம் பார்வைக்கு வந்தது. ஆவல் உந்த, பார்க்கக் கிளம்பினோம்.

எம். ஃபில் பட்டதாரியான ரவி, திருச்சி வட்டாரத்தில் ரொம்பவும் பாப்புலரான சமயச் சொற்பொழிவாளர். இளைஞர். கம்பராமாயணம், வில்லி பாரதம், இதர புராணக் கதைகள், பட்டி மன்றம் என்று முழுநேரப் பிரசங்கர்.

'நகைச்சுவை என்றொரு அம்சம் இல்லாவிட்டால் இத்துறையில் ஓரம் கட்டி விடுவார்கள்' என்ற புலவர் கீரனின் கருத்தைக் கவனத்தில் கொண்டு, சிரிக்கச் சிரிக்கப் பேசுவார் என்று உள்ளூர்க்காரர்கள் சொல்கிறார்கள்.

கம்பராமாயணத்தில் ஐயாயிரம் பாடல்களுக்குமேல் மனப்பாடமாகத் தெரிந்து வைத்திருக்கிறார். வாரியாரும் இல்லை, கீரனும் இல்லை. சமயச் சொற்பொழிவுத் துறையில் இன்று ஒரு வெற்றிடம் ஏற்பட்டிருக்கிறது. ''கூடிய சீக்கிரம் தமிழ்நாடு முழுவதும் பிரபலமாகி விடுவேன்'' என்று நம்பிக்கையோடு கூறும் ரவி, தூர்தர்ஷன்காரர்கள், தம்போன்ற இளைஞர்களுக்கு வாய்ப்புத் தருவதில்லை என்று வெகுவாக வருத்தப்படவும் செய்கிறார்.

✱ ஐயாயிரம் பாடல்கள் மனப்பாடம்



✱ நாணயங்களை ஆராய்கிறார்.



✱ ''முதல்வரின் ஆணை அனுகூலம்தான்.''

## பாப்புலர் பிரஜை

**ஸ்ரீ**ரங்கத்தில் ரங்கநாதருக்கு அடுத்த படியாக ரொம்பவும் பாப்புலர் பிரஜை ஷேக் சின்னமௌலானா. இன்றைக்குத் தம் தள்ளாத வயதிலும் கச்சேரிகளுக்குப் போவதும், கிடைக்கிற நேரத்தில் வீட்டில் சாதகம் பண்ணுவதும், பேரன்களுக்கு போதிப்பதும், நாதஸ்வர வகுப்புகள் எடுப்பதுமாக வெகு உற்சாகமாக இருக்கிறார்.

''நாதஸ்வரம் வாசிப்பது, இதர காற்று வாத்தியங்களை விடவும் மிகவும் கஷ்டமான காரியம். அதனால்தான் இன்று அதிகம் யாரும் இத்துறைக்குப் புதிதாக வருவது இல்லை. தவிரவும் சபாக்களில் நாதஸ்



* ஓலைச் சுவடியில் கண்ட ஒரு மருந்து.

வரக் கச்சேரி வைப்பது மிகக் குறைந்து விட்டது. ஜீவனோபாயத்துக்கு, கல்யாணக் கச்சேரிகளை நம்பித்தான்- எப்பேர்ப்பட்ட நாதஸ்வர வித்வானும் இன்று காலம் தள்ள முடிகிறது. எனவே 'அரசு விழாக்களில் நாதஸ்வரம் அவசியம் இடம்பெற வேண்டும்' என்று முதல்வர் ஆணையிட்டிருப்பது ஒரு அனுகூலம் தான்'' என்கிறார்.

சாயபுவின் பேரன் காசிம், '' தாத்தா சொல்வதெல்லாம் வாஸ்தவம் தான். ஆனால் நான் நாதஸ்வரத்தை மட்டும்தான் நம்பியிருக்கிறேன்; அது என்னைக் கைவிடாது என்பதிலும் உறுதியாக இருக்கிறேன்'' என்கிறார்.

## தீப்புண்ணுக்கு மூலிகை மருந்து!

**ஸ்ரீ**ரங்கத்தில் திரண வைத்திய சாலை வைத்திருக்கும் நாடிக்காரர் சுப்பிரமணியத்தின் பெருமையை ஊரில் யாரைக் கேட்டாலும் சொல்கிறார்கள்.

''கேஸ் வெடிச்சி உடம்பெல்லாம் உரிஞ்சி போயிடிச்சிங்க. கவெர்மென்ட் ஆஸ்பத்திரி மருந்துல பிரயோசனமில்லைன்னு அக்கம்பக்கத்துல சொல்லி, இவர்கிட்ட அனுப்பினாங்க. வாழை இலைல படுக்கவெச்சி என்னமோ மூலிகையை உடம்பு முழுக்க ஊத்தினாரு. ரெண்டு நிமிஷத்துல எரிச்சல் எல்லாம் அடங்கி சில்லுனு ஆயிட்டுது. விபத்து நடந்து ஒருவாரம்தான் ஆவுது. எதனா அடையாளம் தெரியுதா பாருங்க'' என்றார் ஒரு பெண்மணி. நிஜம்தான். சுவடு கூட இல்லை.

''என் முன்னோர்கள் பலர் சித்த வைத்தியர்கள். அவர்களது சுவடிகளைப் படித்து ஒரு மருந்து தீப்புண்ணுக்கு இருப்பதைக் கண்டறிந்தேன். அதன் தயாரிப்பு முறைகளை சிரமப்பட்டுத் தெரிந்து கொண்டு, முயற்சியில் இறங்கினேன். விரைவில் எனக்கு வெற்றி கிட்டியது.'' என்று கூறுகிறார் சுப்பிரமணியம். இவரது கண்டுபிடிப்பைத் தஞ்சை பல்கலைக் கழகத்தினர் எலிகளின்மீது பரிசோதித்துப் பார்த்து, சான்றிதழ் கொடுத்திருக்கிறார்கள்.

## பெருமாளைத் துயிலெழுப்பும் வீணை இசை!

**ஸ்ரீ**ரங்கம் கோவிலில், பெருமாளை தினம் தனது வீணை இசையினால் பள்ளி எழுப்பி- பள்ளிகொள்ள வைக்கும் கைங்கர்யத்தைச் செய்து வருபவர் ரங்கராஜன்.

''பூர்வஜென்மப் புண்ணியம் தான் இது. எத்தனையோ தலைமுறையாக எங்கள் குடும்பத்துக்கு இந்த பாக்கியம் கிடைத்திருக்கிறது. அரங்கனுக்கு முன்னால் தினம் காலையும் இரவும் பத்துநிமிடம் ஆழ்வார் பாசுரம் வாசிப்பது என்பது எப்பேர்ப்பட்ட விஷயம்! தினம் ஆயிரம் வேலை இருந்தாலும் அந்த நேரத்தில் மட்டும் அரங்கன்முன் ஆஜராகி விடுவேன்''என்கிறார் இந்த வீணை வித்வான்.

''இந்த வழக்கம் எத்தனை வருடங்களாக இருந்து வருவது?''

''சரியாகச் சொல்ல முடியாது. விஜயரங்க சொக்கநாத நாயக்கர் என்றொரு மன்னர் இங்கே ஆண்டு வந்தபோது- அவர் ஆரம்பித்த வழக்கம் இது என்கிறார்கள். அந்தக் காலத்தில் ராஜாக்களை பள்ளியெழுப்ப வீணை வாசிப்பார்கள். இவர் ரங்க-ராஜா இல்லையா? அதான்! முகலாயப் படையெடுப்பிற்குப் பின் கொஞ்ச நாள் இந்த வழக்கம் இல்லாதிருந்தது. ராமானுஜர் வந்தபின் மறுபடி ஆரம்பமாகி விட்டது.''

''யாரிடம் கற்றுக் கொண்டீர்கள்?''

''என் அப்பாவிடம் தான். அவர், அந்தக்காலத்தில் பெரிய வித்வானாக இருந்த மைசூர் சேஷண்ணாவிடம் கற்றுக் கொண்டார். இன்று என் பிள்ளைகள் என்னிடம் கற்றுக் கொள்கிறார்கள்!''

ரங்கராஜன் திருச்சி நேஷனல் கல்லூரியில் வைஸ் பிரின்ஸிபாலாக இருந்து ஓய்வு பெற்றவர். பணிபுரிந்த காலத்திலும் கூட பெருமாளை நாள் தவறாது பூபாளத்தில் எழுப்பியும் நீலாம்பரியில் தாலாட்டியும் (மன்னு புகழ் கோசலைதன் மணிவயிறு வாய்த்தவனே...) நிறைவு கண்டவர். ஒரு விஷயம். இவரது இப்பணிக்குச் சம்பளம் உண்டு. எவ்வளவு தெரியுமா? இரண்டு ரூபாய் ஐம்பத்தேழு பைசா!

''அதுவா முக்கியம்? யாருக்குக் கிடைக்கும் இவ்வாய்ப்பு?'' என்கிறார் ரங்கராஜன்.

-நியூஸ்மேன்

வாசகர் தகவல்: கே. சக்திவேல் முருகன், வி.வெங்கட்ராமன், என்.பாஸ்கர், எம்.கதிஜா ஹனிபா, ரா.ராகவன், ரா.ராஜேந்திரன்.



# வாழ்த்துகிறோம்!

இன்று **19-3-1994**

அறுபத்தாறாவது பிறந்தநாள் காணும்
சரித்திரக் கதைச் செம்மல், முத்தமிழ் வித்தகர்,
சிறுகதைச் சேக்கிழார், டாக்டர் என்றெல்லாம்
பட்டம் பெற்றவரும்
தஞ்சைத் தமிழ்ப் பலக்கலைக் கழகத்
தமிழ் அன்னை விருது பெற்றவரும்
ராஜா சர் அண்ணாமலை செட்டியார் எம்.ஏ.சி.
அறக்கட்டளை விருது, கலைமாமணி விருது
பெற்றவருமான எழுத்தாளர் நலம் காக்கும்

எங்கள் அன்புமிகு

## கலைமாமணி விக்கிரமன்

அவர்கள் ஆண்டுகள் பல எல்லா நலங்களுடன்
வாழ அன்புடன் வாழ்த்துகிறோம்!

---

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் - சென்னை
கவிதை உறவு ஆசிரியர் -
கலைமாமணி ஏர்வாடி இராதாகிருஷ்ணன்
ஓம்சக்தி ஆசிரியர் பகீரதன்
போயட் ஆசிரியர் டாக்டர் கிருஷ்ணா சீனிவாஸ்
உரத்த சிந்தனை, உதயம்ராம்,
நிலவன் இலக்கிய உறவு, வேலூர்
மூவேந்தர் முத்து-மூவேந்தர் இலக்கிய மன்றம்
புதுவை மாநிலக் கிளை அனைந்திந்தியத்
தமிழ் எழுத்தாளர்கள் சங்கம், சென்னை.
டி.எஸ். இராமலிங்கம், நர்மதா பதிப்பகம், சென்னை.
யோகா, புகைப்படக் கலைஞர், சென்னை.
புதுகை மு. தருமராஜன், 'கவிதைமாலை'
ஸ்டேட் வங்கி அதிகாரிகள் சங்க இலக்கிய அணி,
கார்த்திக் பைன் ஆர்ட்ஸ், சென்னை - 18.

YOGA SAVITH

# பஸ் டாக்

"பூங்காவனம்! நான் டிக்கெட் எடுத்துட்டேன்...."

"அடடா! நான் வேறே எடுத்திருக்கனே கோமதி..."

"இரண்டு கண்டக்டருங்க ஆளுக்கொரு பக்கமா நிக்கறதுல இது ஒரு தொந்தரவு..."

"எதும்மா தொந்தரவு! நீங்க பேசி வச்சுக்கிட்டு டிக்கெட் எடுக்க வேண்டியது தானே...!"

"பேசிக்க எங்க நேரமிருக்கு? அதான் நிமிஷத்துக்கொரு வண்டி விடுறீங்களே. பஸ் ஸ்டாப்புக்கு வந்து நிக்கறதுக்குள்ளார குபுக்குனு வந்துடுது வண்டி...."

"அட ரங்கநாதா! நிறைய பஸ் விடறதுக்காகச் சலிச்சுக்கற அம்மாளுங்களை இப்பத்தான் பார்க்கறேன்..."

"எத்தினி வண்டி ஓடினாத்தான் என்ன... எல்லாத்துலயும் கூட்டம்தான். திருச்சிக்கும் சீரங்கத்துக்கும், ஏதோ நேந்துக்கிட்ட மாதிரியில்ல ஜனங்க போய் போய் வர்றாங்க!"

ஆமா! போன வெள்ளிக்கிழமை கூட மாவிளக்குக்கு நேந்துக்கிட்டுத்தான் சமயபுரம் போனேன். பஸ்லை விட்டு இறங்கி வெத்தலை, பாக்கு வாங்கலாம்னா மணி பர்ஸைக் காணோம்!"

"துணிப்பையில் போட்டுக்கிட்டுப் போனியாக்கும்! சமயபுரம் ரூட்லதான் சம்பளத்துக்கு ஆள் வைச்சு பிக்பாக்கெட் தொழில் செய்யறாங்கன்னு தெரியுமில்லெ? அப்புறம் நீதானே கவனமா இருந்திருக்கோணும்?"

"ஆமாம்! சமயபுரத்துல அந்தத் தொழி லுன்னா இங்கே சீரங்கத்துல மொதலமைச்சரு பேருல திறந்து வைச்சுட்டு பூட்டியே கிடக்குதே மண்டபம், அதுல கல்யாணம் மட்டும்தான் நடக்கக் காணும்."

"அப்ப வேற எதுனாச்சும் நடக்குதாம்மா?"

"அட, கம்மாயிரு. ஐயோ! பஸ் என்ன இந்தத் திருப்புத் திருப்புது!!"

"இந்த முனையிலே எப்பவும் இப்படித்தான் திரும்பும்னு தெரியுமில்லெ? கவ



பொழுது விடிந்து பொழுது போனால் நெல்லிக்காய் மூட்டைபோல் டூரிஸ்டுகளை அடைத்து வரும் பஸ்கள், கூட்டத்தை இந்நகரில் உமிழ்கின்றன. தவிர, நிரந்தர ஜனத்தொகையும் நாளுக்கு நாள் பெருகுகிறது. ஸ்ரீரங்கம் நகராட்சி ஆணையர் வெங்கடாசலத்தின் பணி சுலபமானதல்லதான்.

எல்லா நகராட்சிகளையும் போல் 'டைட்' பட்ஜெட்டில்தான் இவரும் திணறுவார் என்று பார்த்தால், சில லகரங்கள் ஒதுக்கீடு ஆகியிருப்பதாய்ப் புள்ளி விவரங்கள் உதிர்த்தார்:

- உலக வங்கி உதவி ரூ.44 லட்சம், பாதாளச் சாக்கடை போடுவதற்கு.
- அடிப்படை வசதிகள் வழங்குவதற்கு 12 லட்சம் நிதியுதவி பெறப்பட்டுள்ளது.
- மேற்படி தொகையில் ஐந்து லட்சத்தை எண்பது சோடியம் வேப்பர் விளக்குகள் நிறுவப் பயன்படுத்தியுள்

## எங்கு சுற்றியும் ரங்கனைச் சேர்!

ளோம்.

- நான்கு லட்ச ரூபாய் நவீன கழிப்பிடங்கள் கட்டப் பயனாகியுள்ளது.
- குடிதண்ணீர் வசதியை விரிவாக்கவும் மழை நீர் வடிகால் (Storm water drain) குழாய்கள் அமைக்கவும் போகிறோம்.
- நீண்ட வழக்குக்குப் பிறகு உச்ச நீதிமன்றத் தீர்ப்பு எங்களுக்குச் சாதகமாய் வந்துள்ளது. அதன்படி பதினோரு ஏக்கர் நிலம் கிடைக்கும். கழிவு நீரை அங்கு எடுத்துச் சென்று புல் பண்ணை அமைப்போம்.

கமிஷனரிடம் மேலும் சில கேள்விகள் கேட்டோம்:

''ஆக்கிரமிப்புக்களால் வீதிகள்
றுகிப் போய் தொந்தரவாக உணர்கிறார்
ளே மக்கள்?''

''அவற்றை வெகு விரைவில் எடுத்திடு
வோம்.''

''புது பஸ் ஸ்டாண்ட் கட்டியும்
யன்படுத்தாமல் இருக்காங்க...''

''போலீஸ், ஆர்.டி.ஓ.உதவியோட,
பஸ்களை அங்கு கொண்டு போய் நிறுத்த
வைப்போம். ஒரு மாசத்துக்குள்ள நிலை
ராயிடும்.''

''முதல்வர் பேரில் கட்டியிருக்கற
திருமண மண்டபம் பூட்டியே வைக்கப்
பட்டிருக்கு...?''

''பாத்திரங்களும் ஃபர்னிசரும் வாங்
கிப் போடணும். அப்போ உபயோகத்துக்கு
வந்துரும். சீக்கிரமே செய்துருவோம்.''

''பன்றிகள் தொல்லை...''



''போன மாசம்தான் கட்டேடாம். இப்ப
திரும்பவும் கடப்போறோம்...''

-கமிஷனர் தயாராய்த்தான் இருக்
கிறார்; துடிப்பாய்த்தான் இருக்கிறார்...
ஆனால் பிரச்னைகள்தான் பொல்லாதவை!
'எங்கு சுற்றினும் ரங்கனைச் சேர்' என்று
விடாப்பிடியாய் திருவரங்கத்தைப்
பிடித்துக் கொண்டுள்ளன போலும்!

– நமது நிருபர்



னமா இருக்க வேண்டியதுதானே. பெரிய வண்டிங்க கலபமாத் திரும்பறதுக்கு வழி செய்யணும்னா இரண்டு ரோடும் கூடற முனையிலே இருக்கிற ஓட்டலை எடுத்துட வேண்டியதுதான். யாரு மணி கட்டறது?''

''பூனைக்கு மணி கட்டாட்டாப் போவட்டும். பன்னிங்களையாவது கவனிக்கப்படாதா?''

''அதென்ன, பன்னிங்களைப் போயி பெரிசா சொல்லப் போயிட்டே.... இந்த ஊர்ல நாற்பது கொசுவுங்க சேர்ந்து ஒரு பன்னியைத் தூக்கிக்கிட்டு பறந்து போயி டுமே!''

''கொசுவும் பன்னியும் கொழுக்கறத் துக்கு வழி செய்யறதே நம்மூர்க்காரங்க தானே. லெட்ரின் தண்ணி பூராத்தையும் வாசல்ல திறந்த சாக்கடையில சேர்த்து விட்டுடறோம்.''

''பாதாளச் சாக்கடை வந்தாத் தானே...?''

''அதுவரைக்கும் வீட்ல செப்டிக் டாங்க் கட்டி அதுல லெட்ரின் தண்ணிய விட்டுக்க வேண்டியதுதானே.''

''என் வீட்ல அப்படித்தான் செஞ்சிருக் கேன் கோமதி. ஆனா பாரு, டாங்க் ரொம் பிக் கிடக்குது, முனிசிபாலிடில சொல்லி தண்ணியைப் பம்ப் செஞ்சு எடுத்துப் போக லாரி அனுப்பச் சொன்னா, லாரி ரிப்பேருன் னாங்க.''

''அவங்க அப்படித்தான் சொல்வாங்க! நீ ஆபீஸ்ல நாப்பது ரூபா கட்றதுக்குப் பதிலா அந்த ஆளுங்களுக்குத் தனியா இரு நூறு ரூபாய் குடு... அன்னைக்கே வண்டி வருதா, இல்லையா பாரு....''

''மூணே நிமிஷம்தான் ஆச்சு பஸ் ஏறி! அதுக்குள்ள முப்பது புலம்பல்! ஏம்மா சந்தோஷப்படறதுக்கே உங்களுக்கு இந்த ஊர்ல ஒண்ணுமில்லியா?''

''இல்லாம என்ன? அதோ ராஜ கோபுரத்தைப் பாருங்க. தென்னை மரங்கள் ளாம் திரை பிடிக்க மெள்ள மெள்ள விலகற மாதிரியில்ல....? வேற எந்த ஊர்ல இந்த அழகைப் பார்க்க முடியுங்கற....?''

(வாசகர் கடிதங்களின் அடிப்படையில்.)

# பஸ் டாக்

# காவியம்



டாக்டருக்கும், டிராபிக் போலீசுக்கும் காதல். அழகான 'நாட்'. அதோடு சரி! ஒவ்வொரு காட்சியிலும், வேகம் இருக்க வேண்டிய இடத்தில் சோம்பல், உணர்ச்சியிடத்தில் வழிசல்.

டிராபிக் போலீஸ், புதுமுகம் ரூபன் ராஜ். இன்னும் வளர்ச்சி தேவை. வழிசல், சண்டை போன்ற தமிழ் ஹீரோ பிரதாபங்களில் பாஸ்மார்க். உணர்ச்சி, அழுகை வகையறாக்களில் பெரிய முட்டை. அவ்வப்போது அண்ணாதுரை பாணிப் பேச்சு. எதற்கோ?

ஏற்கனவே காமெடியன்கள் வக்கிர பிரகஸ்பதிகள். இதில் இன்னொரு வக்கிரர் வெளிப்படுகிறார். வித்தியாசமாய் கோபம் வருமாம். வந்தால் என்ன செய்வார்? ஐயோ வேண்டாம், ஜுஹுன் பார்த்துத் தமிழ் கற்றுக் கொள்ளலாம். அதுவே மேல்.

காதல் கதையென்றால் வில்லனில்லாமலா? இப்பட வில்லன் கடைந்தெடுத்த கோமாளி. முதலில் சபதம் போடுகிறார். பிறகு காப்பாற்றுகிறேன் பேர்வழி என்று ஆபரேஷனை மாற்றுகிறார். இறுதியில் கற்பழிப்பு முயற்சி வரை ஒரு இடத்திலாவது வில்லத்தனம் வர வேண்டுமே? வரவேயில்லை. வருவது சிரிப்பு தான்.

ஒரு சந்தோஷம். தமிழ் சினிமா இன்னும் முழுதாய் டைரக்டரை முழுங்கிவிடவில்லை. தாலி சென்டிமெண்ட் இல்லை. வேப்பிலை டான்ஸோ, குலுக்கு டான்ஸோ இல்லை. அதுவரை வாழ்த்துக்கள்!

படத்திற்கு அழகாய்ப் பெயர் சூட்டத் தெரிந்திருக்கிறது. கிளிப்பச்சையில் ஊரெல்லாம் விளம்பரப்படுத்தத் தெரிந்திருக்கிறது. அடுத்த படத்தில், தியேட்டருக்கு வரும் மக்களை உட்கார வைக்கவும் தெரிந்து கொண்டு விடுவார்கள் என நம்புவோம்.

-துளசி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

**121 ஆண்டுகளாக**

**சேவை செய்து வரும்**

**நிதி நிறுவனம்**


துவக்கம் 1872

Phone : 71099
71230

# தி மயிலாப்பூர் இந்து சாசுவத நிதி

(அளவையுள்ளது)

பதிவு அலுவலகம் (தலைமை அலுவலகம்)

நெ.32 & 33 தெற்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-600 004.

வேலை நேரம் காலை 9 மணி முதல் 12 மணி வரை.
பிற்பகல் 2 மணி முதல் 5 மணி வரை. வார விடுமுறை : புதன் கிழமை.

கிளைகள் : பார்க்டவுன், வண்ணாரப்பேட்டை, சைதாப்பேட்டை, அமைந்தகரை, அடையாறு, கோடம்பாக்கம், அண்ணாநகர், பெரம்பூர்.

## பிக்செட் டெபாசிட்டுகள்

கீழ்க்குறிப்பிட்ட வட்டி விகிதங்களில் பங்குதாரர்களிடமிருந்து ஏற்றுக் கொள்ளப்படும்.

3மாதங்கள் 12% 6 மாதங்கள் 14% 1ஆண்டு 15%
2 ஆண்டுகள் 16% 3ஆண்டுகள் 17%

## பிக்செட் டெபாசிட் மறுமுதலீட்டுத் திட்டம்

**50 மாதங்களிலேயே இரட்டிப்பாகிறது.**

| டெபாசிட் தொகை | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 50 மாதங்கள் | 78 மாதங்கள் | 120 மாதங்கள் | 180 மாதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 500 | 585 | 700 | 830 | 1,010 | 1,500 | 2,710 | 6,320 |
| ரூ. 10,000 | 11,700 | 14,000 | 16,600 | 20,200 | 30,000 | 54,200 | 1,26,400 |

## ரெக்கரிங் டெபாசிட்டுகள்

முதிர்வு பெறும்போது டெபாசிட்தாரர்கள் பெறும் தொகை

| மாதாந்திர டெபாசிட் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் | 72 மாதங்கள் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 10 | 130 | 280 | 456 | 650 | 860 | 1,100 |
| ரூ. 100 | 1,300 | 2,800 | 4,560 | 6,500 | 8,600 | 11,000 |
| ரூ. 500 | 6,500 | 14,000 | 22,800 | 32,500 | 43,000 | 55,000 |

## பணப்பத்திரங்கள்

ரூ.778/-முதலீடு செய்தால் 2 ஆண்டுகளுக்குப் பின் ரூ.1,000/- திரும்பப் பெறலாம்.

## சேவிங்ஸ் டெபாசிட்டுகள்

சேவிங்ஸ் டெபாசிட்டுக்கு 9 சதவிகிதம் வட்டி அளிக்கப்படும்.

**நகைக் கடன் சவரனுக்கு ரூ.2400/- கடனுக்கு R.D. இல்லை**

**வட்டி ரூ.100/-க்கு ரூ.1-75 மட்டுமே.**

திரு J. ஜெகன்னாதன்,
உபதலைவர்

திரு R. சம்பந்தம்
ஆக்டிங் செயலாளர்
(பங்குதாரர்களுக்கு மட்டும்)

திரு S. கிருத்திவாசன்
தலைவர்
(பங்கின் விலை ரூ.1/- மட்டும்)

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka